S. D. M. Series 16.

# BHOOPALAN  

#  BHUVANASUNDARI



BY

T. RANGASAWMY NAIDU



Printed & Published By

S. DURAISAWMY MUDALIAR

AT HIS

SRI "BHARATHI" PRESS, CHOOLAI, MADRAS.

1923



[Price As 6

# நவீன கதா புத்தகங்கள்.

## கமலவல்லி அல்லது கன்னியின் சமர்த்து.

ஓர் சிறந்த நவீன துப்பறியும் நாவல். இதில் அபார அற்புத விஷயங்களும், ஆச்சர் யத்தை யும் இன்பத்தையும் விளைவிக் கும் சந்தர்ப்பங்களும் ஏராளமா யிருப்பதால் இரண்டு பாகங்க ளாக அச்சிடப்பட்டிருக்கிறது.

பாகம் 1-க்கு 1 12 0

## இருகொலை இரகசியம்.

இது ஓர் ஆச்சர்யமான நவீன துப்பறியும் நாவல். இதில் வெ ளியிட்டிருக்கும் துப்பறியும்சூழ் ச்சி வேறெந்த நாவல்களிலும் காணப்படாத விசேடமாகும். இதில் விவரித்திருக்கும் இர ண்டு கொலைகளின் இரகசியங் கள் மிகவும் ஆச்சரியத்தைத் தரும். விலை ரூபா 1 0 0

## வசீகரன்.

ஆச்சர்யத்தையும் ஆனந்தத் தையும் உண்டாக்கும் நவீன நா வல்களில் இதுவுமொன்று. இ தில் முற்றும் வியப்புக்கிடமான தும், மனந் திடுக்கிடக்கூடியது மான விஷயங்கள் செறிந்து கிடக்கின்றன. விலை அணு 12.

## புவனராணி.

இது ஓர் மேன்மையான நா வல். இக்கதாநாயகி ஓர் ஆரண் யத்தில் [illegible]வரத்தின மிழைத்த மாளிகையிலிருக்கும்போது புவ ன சக்ரேஸ்வர மன்னன் கண்டு திடீரென்று பிரிவது மிகவும் விந்தையானது. விலை அணு 8.

## சௌந்தராபாய் அல்லது சதிகொலை.

இது ஓர் நவீன துப்பறியும் நாவல். இதில் விவரித்திருக் கும் சதிகொலையும், கொலைக் குப் பிரயத்தினங்களும், கொலை யாளிகளின் கொடிய செய்கை களும் ஆச்சர்யமானதுடன் இ தில் அநேக அற்புத நிகழ்ச்சி களும் விவரித்திருக்கின்றது.

விலை ரூபா 1 0 0

## தலைவாங்கி அபூர்வசிந்தாமணி.

இது ஓர் அற்புதமான செந் தமிழ் நாவல். இதில் ஸ்திரீ, புருஷ, பாலக, பாலகிகளுக்கு யுக்தமான அநேக அதியற்புத விஷயங்களும், பல நீதிகளும் ஒருங்கே யமையப்பெற்று, படி க்கப் படிக்கப் பரமானந்தத்தை யும் கேட்க கேட்க இன்பத்தை யும் தரும்படி மிகத் தெளிவாய் எழுதப்பட் டிருக்கிறது. இக் கதாநாயகியினால் கேட்கப்படும் மூன்று வினாக்களும், மெய்யழ கனென்னும் அரச குமாரனால் அளிக்கப்படும் சரியான விடை களும் மிகவும் ஆச்சரியமாயிருக் கும். விலை ரூபா 1 0 0

## தங்கவேணி:

ஸ்திரீகளுக்கான முக்கிய நா வல்களி லிதுவொன்று. இக்க தையில் பாலகேது வென்னும் அரசகுமாரன் இக்கதா நாயகி யை மணம்புரிவது மகா வேடிக் கையானது. விலை அணு 4.

உ

# பூபாலன் புவனசுந்தரி

ஓர் இனிய செந்தமிழ் நாவல்

காஞ்சீபுரம்

தி. அரங்கசாமி நாயுடு அவர்களால்

எழுதப்பட்டு

நான்காம் பதிப்பு



கீழ்கட்டளை

எஸ். துரைசாமி முதலியார் அவர்களால்

தமது

சென்னை சூளை, ஸ்ரீ "பாரதி" அச்சுக்கூடத்திற்

பதிக்பிக்கப்பெற்றது.

1923

 [விலை அணு 6.

# முகவுரை

இந்நூலில் வாசிப்பவர் மனத்தைக் கவரத்தக்க எல்லா விஷயங்களையு மமைத்து ஆச்சரியத்தையும் சந்தோஷத்தையும் விளக்கும் அம்சங்க ளிருத்தல் வேண்டு மென்பதற்குத் திருஷ்டாந்தமாக இவ்வரிய நூலை எழுதி யுள்ளேன். அநேக அற்புதக் கதைகள் இதிலடங்கி யிருக்கினும் முக்கியமாகப் பூபாலன் என்பான் தன் தோழன் சுபுத்தியுடனும் தன் மனைவி சுந்தரவல்லியுடனும் ஒரு தவசியால் அளிக்கப் பெற்ற ஆகாயத்தில் செல்லக்கூடிய ஓர் அஸ்வத்தின்மேல் ஊர்ந்து செல்லும்போது, தன் மனைவியும் தோழனும் ஆழியில் தவறிவிழத் தான் மர்விந்தபுரத்தில் தனஞ்சயன் என்பவனால் ஆதரிக்கப்பட்டு அத்தேயத் தரசன் மகளாகிய புவனசுந்தரியை ஆழியின் மத்திய கிரகத்தில் காந்தர்வ மணம்புரிந்து பீமாபுரி யடைந்து சுந்தரவதனியை மணம் புரிகின்றான். ஆழியில் விழுந்த சுந்தரவல்லியும் ஆதித்தபுரி யடைந்து ஆநந்த வல்லியால் ஆதரிக்கப்பட்டு தன் கணவனை யடைகின்றாள். தோழன் சுபுத்தியும் கரைசேர்ந்து தன்புத்தி சாதுர்யத்தினால் பூபாலனை யடைகின்றான். புவனசுந்தரி பூபாலனைப் பிரிந்து அநேக துன்பங்களுக் கிலக்காகி மச்சதேசத்தை யடைந்து அம்புஜாட்சியால் ஆதரிக்கப் பட்டுத் தன்னுபகனை யடைகின்றாள். இக்கதையை ஓர் உதாரணமாக எடுத்து யான் எழுதப் புகுந்ததன் காரணம் வாசிப்போர் மனத்தை நன்னெறியில் செல்லத் தூண்டுதற்கேயாம்.

இங்ஙனம்:

காஞ்சீபுரம். தி. அரங்கசாமி நாயுடு.

# பூபாலன் புவனசுந்தரி

## அத்தியாயம் 1

### பூபாலன் அஸ்வத்தை யடைதல்

பூபாலன்.—ஆ ஹா! இவ்வனத்தின் அழகே யழகு! கடவுளின் சிருஷ்டியின் திறத்தை எவ்வாறு வர்ணிக்கக் கூடும்? பர்வதத் தொடர்ச்சிகளின் வரிசை மேக மண்டலத்தை யளாவி நிற்கின்றன. எப்பக்கம் நோக்கினும் மலைகளும், மலைச்சிகரங்களின் மீதுள்ள நெடிய விருக்ஷங்களும் வானமளாவி நிற்கின்றன. கதிரவன் காட்சியும் களங்கமின்றிக் காணப்படுவதில்லை. வானில் சிலவெளி சுத்த நீலாகாயமாகவும், சிலவெளி வெண்மையாகவும், சிலவெளி கருமையான மேகங்கள் கவிந்து எனக்குக் கிழக்கு மேற்குத் திசைகளை யறிய வொட்டாது மறைத்திருக்கின்றன. என் பிதா ஜீவவந்தராயிருந்து அரசியற்றுங்காலத்திலேயே இப் பூமண்டலத்தின் இயற்கைச சுபாவங்களைக் கண்ணுற் றுத் திரும்பவேண்டு மென்றும், பூமண்டலத்தைப் பிரதட்சணமாய் வருவதற்கு விசையாய்ச் செல்லக்கூடிய ஓர் யந்திரம் கிடைத்தா லொழிய என்னெண்ணம் பலிக்காதென்றும், அதற்காகக் காட்டில் அருந்தவம் புரியும் தபோதனர்களிடஞ் சென்று வணங்கி அவர்களால் அவ்வித யந்திரம் ஒன்று பெற உத்தேசித்து நாட்டை விட்டு இக்காட்டில் வந்தும் எவ்விடம் செல்வ தென்றும், தபோதனர்கள் வசிக்குமிட மின்ன தென்றும் தெரியவில்லை. எவ்வித கஷ்டங்களை யனுபவித்தாயினும் எனதெண்ணத்தை நிறை

வெற்றிக் கொள்ளாவிடின் என் வாழ்நாள் முழுதும் நான் இதைப்பற்றிச் சிந்திக்க வேண்டிவரும். 'ஆ ஜெகதீசா! என்னிடம் உன் கிருபையைக் காட்ட வேண்டும். அதோ, யாரோ ஒரு மனிதன் கையில் வில்லம்புகளுடன் வருகின்றுன். அவனைப் பார்க்கின் வனசரனுகக் காணப்படுகின்றுன். அவனைக் கொண்டே தபோதனர் வசிக்குந் திக்கைத் தெரிந்துகொள்வேன். ஐயா! நீர் எங்கு வசிப்பது? இக்காட்டில் தபோதனர்கள் உறைவிடம் எத்திக்கிலுள்ளது' அதை யெனக்குத் தெரிவிக்கின் பேருபகாரமாயிருக்கும்.

வேடன்.—ஐயா! தங்களை நோக்கில் இராஜ வம்சத்தில் தோன்றியவராகக் காணப்படுகிறது. தாங்கள் எந்த நாடு? இந்த நிர்மானுஷியமானக் காட்டில் முனிபுங்கவர்களைக் காணத் தனிமையாய் வரக்காரணம் யாது?

பூபாலன்.—நண்ப! நான் இக்கானகத்தில் திசை தப்பி யிருக்கும்போது கடவுளருளால் நீ எதிர்ப்பட்டதற்காக நான் மெத்த சந்தோஷ மடைந்தேன். ஆகையால் என் விருத்தாந்தத்தை உன் விருப்பத்தின்படிச் சொல்லாமலிரேன். நான் விதர்ப்ப நாடாளும் கீர்த்திசீலன் என்னும் அரசனுடைய ஏக புத்திரன், என்பெயர் பூபாலன், என் பிதாவினுடைய அரசாட்சியை யான் ஏற்றுக் கொள்ளுமுன் பூபிரதட்சணஞ் செய்து பூமண்டலத்தின் இயற்கை சுபாவங்களைக் கண்ணுற வேண்டுமென்றும், அப்படிச் செய்வதற்கு சமுத்திரங்களையும், காடுகளையுங் கடந்து அதி சிக்கிரமாய்ச் செல்லத்தக்க யந்திரமொன் றிருந்தாலொழிய என் யோசனை பலிக்கா தென்றும், ஆகையால் அருந்தவம் புரியும் மகான்களால் அவ்வித யந்திரம்பெற உத்தேசித்து இவ்விடம் போந்தனன்.

வேடன்.—இராஜதனயா! நீர் கொண்ட எண்ணம்

கடவுள் கிருபையால் கைகூடு மென்பதற்குச் சந்தேக மில்லை. அதோ பாரும், சற்று தூரத்தில் ஓர் உன்னத சிகரத்தையுடைய பர்வதம் காணப்படுகிறது. அதன் அடிவாரத்தில் அநேக மகான்களுடைய ஆஸ்மரங்கள் காணப்படும். ஆகையால் இவ்வழியே செல்வாயாக. யான் என் குடிசையை நாடிச் செல்கின்றேன்.

பூபாலன்.—வேடன் எனக்குக் காண்பித்த வழி மிகவும் அழகாயிருக்கின்றது. எதிரில் காணப்படும் முத்துப்போன்ற தெள்ளிய நீரோடைகளின் ஜல வோட்டம் ஸ்படிகத்தைத் தோற்கடிக்கின்றது. என்ன விநோதம்! நீரோடைகளின் கரைகளில் வரிசையாய்ச்செழித்து வளர்ந்தோங்கி தழைத்த பலவித புட்பச்செடிகள் சூரியவெப்பப் பரிசமின்றி ஒய்யாரமாக அசைந்து நிற்கின்றன. ஆ ஹா! என்ன வனப்பு! ஒருபக்கம் உயர்ந்த மேட்டுப் பாங்கான மலை யெழுச்சியும், மற்றொரு பக்கம் பள்ளத் தாக்கான சுனைகளும் காணப்படுகின்றன. இவ்வளவுதூரம் நடந்தும் இளைப்படைய விடமில்லாது குளிர்ந்த விருக்ஷங்களின் நிழல் ஆதித்தனுடைய தீக்ஷணியத்தைத் தலைக்காட்டவொட்டாமல் காத்து நிற்கின்றன. எவ்விடம் நோக்கினும் மஞ்சள், சிவப்பு, வெண்மை முதலிய பலவர்ணமான மலர்கள் அபரிமிதமாய்ப் பூத்துக் காற்றி லசைவதினால் இதழ்க ளுதிர்ந்து புஷ்பமாரி பொழிவதுபோல் காணப்படுகின்றன. நெடிய விருக்ஷங்களின் செழிப்பென்ன! அவைகளின்மீது கொடிமல்லிகை, சண்பகம் முதலிய கொடிவர்க்கங்கள் படர்ந்து மதுரமான மணத்தை வீசி அசைவாடி நிற்கின்றன. மலைகளின்மீதுத் தங்கி நிற்கும் பனிநீர்த்துளிகள் கதிரவனது இளங்கிரண பரிசத்தால் ஜொலிக்கின்றன. வேடன் சொன்னபடி அதோ ஓர் அழகான ஆஸ்ரமம் காணப்படுகிறது. ஆ ஹா! இத்தவசிகள்

வசிக்குஞ் சோலை பகையைப் பரிஹரித்ததும், பொறாமை யைப் போக்கியதுமா யிருக்கின்றது. இங்கு விவேகமற்ற விலங்குகளுங்கூட சாஸ்வதமாகத் தங்களிட மிருக்கும் இயல்பான பகைமையைப் பரிஹரித்து மிகவும் அமைதி யான சுபாவத்தைப் பெற்றவைகளாய்த் தபோ வனந் தன்னில் தங்கி வசிக்கும் ஆனந்தத்தை யனுபவிக்கின்றன. இதோ நாகமொன்று வெயிலால் வாடப்பட்டு மயிலினது தோகைக்குள் அஞ்சாமற் பதுங்குகின்றது. இதோ மான் குட்டியொன்று தன் தாயை விட்டுப் பிடரி மயிர்ப்படராத சிங்கக் குட்டிகளுடன் கூடிப் பரிசயம்பெற்று, நன்கு சுரப் புண்டு பெருகும் பாற்பெருக் குடையதான சிங்கப்பேட் டின் முலையை யுண்ணுகிறது. இங்கு இடைவிடாது செவி யுறப்படும் மந்திரங்களை சுககுலங்கள் ஓயாமல் உச்சரித் துக் கொண்டிருக்கின்றன. கிழவரும் கண் தெரியாதவரு மான முனிவர்களை அங்கு பழக்கமுடைய வானரங்கள் கைகொடுத்து ஆஸ்ரமங்களுக்கு உள்ளிருந்து வெளியிலும் வெளியிலிருந் துள்ளேயும் அழைத்துச் செல்கின்றன. தர்ம சாஸ்திரங்கள் தர்க்கிக்கப் படுகின்றன. இத்தகைய ஆஸ்ர மத்தின் மத்தியபாகத்தை அலங்கரிக்கச் செய்யும் ஓர் அசோகமரத்தின் அடி நிழலில் ஓர் முனிபுங்கவர் நிஷ்டை யில் வீற்றிருக்கிறார். அவர் வெகு நீண்டு நரைத்துப்போன உரோமச்சடைகளால் தெய்வலோக மேறுவதற்கு சம்பா திக்கப்பெற்ற புண்ணிய நூற் கயிறுகளுடன் கூடியவர் போல் விளங்குகின்றார். வெகு சபலங்களான இந்திரியங்க ளாகுங் குதிரைகளை உள்ளேயடக்கிக் கட்டும் வடக்கயிறு கள்போல் நீண்டு படர்ந்திருக்கும் நாடி நரம்புகளால் அவரது சரீரம் கவியப்பெற் றிருக்கின்றது. அவரது திடத் தன்மை பெருங் குன்றங்களுக்கும், காம்பீர்யத்தைக் கடல் களுக்கும், காந்தியைக் கதிரவனுக்கும் பகுத்திடுபவர்போல்

காணப்படுகிறார். இம்மஹான் தயாரஸப் பெருக்கு, ஸம்ஸாரக் கடலைக் கடக்கும் சேது. ஆசைகளென்னும் கொடிகளின் அடவிக்குக் கோடரி, அஞ்ஞானமாகும் அந்தகாரத்திற்கு ஆதித்தன். இவருடைய அருட்பார்வை என்மேல் உதயமாகும் வரையில் அவருக்கு முன் அஞ்சலியஸ்தனாய் நிற்கிறேன்.

முனிவர்.—(கண்ணை விழித்து) இராஜ புத்திரா! நீ இவண் நாடிவந்த குறிப்பை யான் உணர்ந்தேன். நீ நினைத்தபோது உனக்குமுன் ஓர் அஸ்வம் தோன்றும். அதின்மேல் நீ ஆரோகணித்து நீ செல்லவேண்டிய இடத்தை நினைத்த மாத்திரத்தில் ஆகாய மார்க்கமாய்ச் சென்று அவ்விடத்தி லுன்னைச் சேர்க்கும். ஆனால் உனக்குப் பெரிய ஆபத்து சம்பவிக்குங் காலத்தில் அவ்வஸ்வம் உன்னை விட்டகலும். இனி உன் தேசத்தை நாடிச் செல்வாயாக. (கண்ணை மூடிக்கொள்ளுதல்.)

பூபாலன்.—(தனக்குள்) சர்வாந்திரியாமியாகிய பகவானுடைய கிருபையால் யான் நாடிவந்த கோறிக்கை ஈடேறின. இனி என் நகரஞ்சென்று தாய், தந்தை, மனைவி, சிநேகிதன் முதலானவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு பூபிரதட்சணம் செய்ய சித்தப்படுவேன்.

---

## அத்தியாயம் 2

### பூபாலன் பூபிரதட்சணஞ் செய்யத் தன் தந்தையின் அனுமதிப்பேறல்.

கீர்த்திசீலன்.—அமாத்தியவர்யா! எனக்கோ வயதாய் விட்டபடியால் இனி யான் இராஜ்ய பாரத்தைச் சுமக்கக் கூடாமலிருக்கிறது. என் குமாரனாகிய பூபாலனும் தக்க வயது வந்தவனா யிருக்கிறான். ஆகையால் அவனுக்கு

முடிசூட்டி அவனுக்கு சினேகிதனையும் உம்முடைய குமாரனையு மிருக்கிற சுபுத்தியை மந்திரியாகச் செய்ய எண்ணங்கொண் டிருக்கின்றேன். ஆகையால் இதைப்பற்றித் தாங்கள் என்ன தெரிவிக்கிறீர்.

மந்திரி சுகநாசன்.—அண்ணலே!

"முறை செய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப்படும்."

என்பதுபோல ஈஸ்வரன் எறும்புகடை யானை முதலாகவுள்ள எண்பத்து நான்கு லக்ஷம் யோனி பேதமான சகல ஜிவராசிகளையும், அதற்குத் தக்க உணவும், இடமும், செயலும் அளித்து, ஒவ்வோ ராத்துமாவிலுந் தானே பரமாத்துமாவாக விருந்து எப்படிக் குறைவின்றி இரக்ஷித்து வருகின்றனரோ, அவ்வண்ணமே நட்பினர், பகைவர், உறவினர், அயலார், உயர்ந்தோர், இழிந்தோ ரென்னும் பேதமின்றி தன்னுடைய ராஜ்யத்திற் குட்பட்ட சகல ஜனங்களுக்கும் வேண்டிய உதவிசெய்து, யாதோர் வித்தியாசமுமின்றி, ஒவ்வொருவரையும் தன்னைப்போலவே பாவித்துச் சிறு குழந்தைகளுக்கும் தாய் தந்தையரெனப் பழியாவங்களுக்கஞ்சி செங்கோல் செலுத்திவந்தீர். தங்களைப் போலவே தங்களுடையச் செல்வக் குமாரரும் அரசாண்டு வருவார். ஆயினும் அவரை இங்கழைத்து அவருடைய எண்ணத்தைத் தெரிந்து, பிறகு யோசிக்கலா மென்று எண்ணுகிறேன்.

கீர்த்திசீலன்.—நல்லது அப்படியே என் குமாரனை இங்கழைத்து அவ ணெண்ணத்தைத் தெரிந்துக் கொள்ளுகிறேன். (குமாரனை வரவழைத்தல்) குழந்தாய்! பூபாலா! யான் உன்னை இச்சபையின் கண் வரவழைத்தக் காரணம் யாதெனில், நானோ விர்த்தாப்பிய தசையை யடைந்தேன். இனி இப் பூபாரத்தைத் தாங்க என்னாலாகாது. ஆகையால்

நீ இப்போது தக்க பக்குவத்தையடைந் திருக்கிறபடியால் நீ முடி சூட்டிக்கொள்ள வேண்டுமென்பதே எனக்கும் இச்சபையி லுள்ளோருக்கும் கருத்தாகும்.

பூபாலன்.—பிதா! தாங்கள் தெரிவித்த துண்மையே யாயினும், யான் உலகியல்பறியாது இப்பூபாரத்தை வகிப்ப தெங்ஙனம்? ஆதலின் என்மீது மனமிரங்கி விடையளிக் கின் யான் பூபிரதக்ஷணம் செய்து உலகியல் பனைத்தையு மறிந்து திரும்பி வந்தவுடன் தங்க ளெண்ணத்தின்படி நடக் கச் சித்தமா யிருக்கிறேன்.

ம. சுகநாசன்.—அரசே! தம்முடைய விருப்பத்திற் கும் தமது குமாரருடைய நோக்கத்திற்கும் சரியா யிரா விடினும், பூபாரத்தை ஏற்றுக் கொள்ளுமுன் உலகியல் பறிவதே மேலானது. எப்படியெனில், ஒரு புறுவரசு தன் பரிவாரங்களுடன் காட்டின்வழியாய்ச் செல்லும்போது, ஓர் வேடனால் வலை விரிக்கப்பட்டு அதன்மேல் தெளிக்கப் பட்டிருந்த தானியத்தைப் பார்த்து, அப்புறுவரசு தன் பரிவாரப் புறுக்களுடன் "இந்த நிர்மானுஷ்யமான காட் டில் தானியமெப்படி வரும்? யாராவது கொண்டுவந்து போட்டிருக்க வேண்டும். இது நமக்குத் தெரிந்தாலல்லாம லிதைப் பக்ஷிக்கலாகாது. ஆகையால் ஆலோசனைசெய்து யாதொன்று செய்யத் தக்கதோ வதைச் செய்யவேண்டும்" என்று சொல்லிற்று. இதைக்கேட்ட ஒருபுறு கர்வத்தோடு "இப்படி யாலோசித்தா லோரிரையு நமக்ககப்படாது. மேலும் வெட்கப்படுகிறவன், பொறுமையுள்ளவன், சந் தோஷப்படாதவன், குரோதமுள்ளவன், தீராச் சந்தேக முள்ளவன், பிறர்பொருளாற் சீவிக்கிறவன் இவ்வாறு பேருந் துக்கத்தையே யனுபவிப்பார்கள்." என, இதைக் கேட்டுப் புறுக்க ளெல்லாம் தானியத்தைத் தின்னும் பொருட்டுப் போய் நிலத்திலிறங்கி வலையி லகப்பட்டன.

புறுவரசு இதைப்பார்த் தெல்லாரு மென்சொல்லைக் கேளா மற்போனார்கள். இப்போது நாமொன்றியா யிருந்து பய னில்லை, என்றுசொல்லி அதுவும் வலையில் வந்தகப்பட் டது. வேடன் பக்ஷிகள் வலையில் சிக்கிக் கொண்டதைப் பார்த்து அதனிடத்திற்கு வரத் தொடங்கினான். அதைப் புறுக்கள் கண்டு, அரசனைப்பார்த்து "நாங்கள் நீசன் புத்தி யைக்கேட் டுன்னை யவமானம் பண்ணினோம். அதன் பலன் பிராப்தியாயிற்று" என, அப்போது புறுவரசு "இப்போ திதைச் சொல்லிப் பலனென்ன ? இதற்கோருபாய மிருக் கிறது, எல்லோரும் வலையோடுகூட வொருமிக்கப் பறந்து வேறிடத்திற்குப் போகவேண்டும், அப்படிச் செய்தாற் றான் பிராணனைக் காப்பாற்றலாம்" என, இதைக் கேட்ட வுடனே யெல்லாப் பறவைகளும் வலையோடுகூடச் சடுதி யில் பறந்து போயின. அதைப் பார்த்தவேடன் தூரத்தி லிருந் தாச்சரியப்பட்டு இவைகளொரே மனதாய் வலை யைக் கொண்டு போயின. ஆயினுமிவைகளி லொன்றுக் கொன்று சண்டை நேரிடும். அப்போ தென்கையி லகப்படு மென நினைத்துக்கொண் டவைகளின் பின்னே போகும் போது புறுக்கள் அவன் கண்ணுக்கு மறைந்துபோய் விட் டன. பிறகவன் வருத்தப்பட்டுத் திரும்பி வந்து விட் டான். புறுவரசு தன் கூட்டத்தைப் பார்த்து "கண்டகி நதி தீரத்திலிருக்கும் சித்திர வனத்தில் என் சினேகனான ஓர் எலியரச னிருக்கின்றான். அவன் பல்லினாலே நம் முடைய வலையை யறுப்பான். அங்கே நடவுங்கள்" என, இதைக் கேட்டபடியே அப்புறுக்கள் எலியரசன் வளையண் டை யிறங்கின. எலியரசன் புறுக்களின் சப்தத்தைக்கேட்டு வளையினின்றும் வெளிவந்து புறுவரசரின் அவஸ்தையைப் பார்த்து மிகவும் துக்கித்து, "மித்திரா! எல்லாரைக் காட் டிலும் நீ சமர்த்தனுமே. உனக் கிப்படிப்பட்ட காரிய

மெப்படி நேரிட்டது?" என, புரு "எந்த காலத்தி லெது நடக்குமோ வது நடக்கும்; விதி வலிது, அதன்முன் யாருடைய வுபாயம் நடக்கும்? கடல் பெருகி மேலிட்டா லதற்குக் கரையேது?" என எலியரசன், "ஆம், நூறுநாழிகை வழித்தூரத்தி லிருந்தே வஸ்துக்களைத் தெரிந்துகொண்டு போகிற நீ இன்றைக்கு வேடன் வலையிற் பாராமற் சிக்கிக் கொண்டாயே பார். சந்திர சூரியர்களுக்கு ராகு கேதுக்களாற் பீடை வருதலும், யானையும் பறவையும் பாம்புங் கட்டுப்படுதலும், புத்திசாலிகளுக்கும் வருமைவருதலுந் தெய்வத்தின் மகிமையே யல்லாமல் வேறல்ல" என்று சொல்லி புருவரசு கட்டுண்டிருக்கிற வலைக்கயற்றை யறுக்கத்தொடங்கிற்று. அப்போது புருவரசு, மித்திரா! முன்னே யென் பரிவாரத்தினுடைய கயற்றையறுத்துப் பிறகென் பாசத்தைத் துணி" எனக்கேட்க, எலி "என் பல்லு மிகவு மெதுவானது. அதற்கும் பலமுங்கொஞ்சம். இத்தனைப் பெயருடைய பந்தனைக ளெனக்கெப்படி யறுபடும்? உன் தளையை யறுத்துப் பின்னென் சாமர்த்தியத்துக்குத் தக்கதாக வவர்களுடைய தளையையு மறுப்பேன்" என, எலியரசு, "தன்னைக் காப்பாற்றிக்கொண்டு தன் பரிவாரங்களைக் காப்பாற்றவேண்டும். அறம் பொரு ளின்பம் வீடாகிய விவைகளுக்குப் பிராணன் முக்கிய சாதன மாகையால் அதைக் காப்பாற்றினு லெல்லாவற்றையுங் காப்பாற்றினுற் போலாகிறது" எனப் புருவரசு, "இந்த நீதி சரிதான். ஆயினு மிப்படிப்பட்ட வேதனையினின்றும் பாலனம் பண்ணுகிறதற் கல்லவோ என்னை இவர்கள் ராஜாவாக நினைக்கிருர்கள்? ஆகையால் என் பிராணனிடத்தி லிச்சையை விட்டிவர்களைப் பிழைப்பி" என அதைக்கேட்டெலி, "நீ பரமசாது, அடுத்தவர்களை யாதரிக்கிறவனு யிருக்கிருய். எஜமானிடத்தில் விசுவாச மாயிருக்கிற சேவ

கனும், சேவகனிடத்தில் பிரீதியாயிருக்கிற வெசமானனுஞ் சுகமடைவார்கள்" என்றுசொல்லி, எல்லாவற்றின் பாசங் களையு மறுத்துப் புருவரசனுடைய கட்டையுஞ் சேதித் தது. ஆகையால் பறவை முதலிய ஜந்துக்களுங்கூட அரச நீதியை யுணர்ந்து நீதி செலுத்துகின்றன. அதுவும் அனு போகத்தினாலேயே பெற வேண்டி யிருக்கிறது. ஆகையால் தங்கள் குமாரர் தெரிவித்தபடி உலக இயற்கையை யறி ந்து, பின் அரச காரியத்தை நடத்துவது மிகவும் சிலாகிக் கத்தக்க தானபடியால் அவருக்கு விடை கொடுத்தனுப்பு வதே யுக்தமாகத் தோன்றுகிறது. என் குமாரனாகிய சுபுத்தியையும் கூட அனுப்ப உத்தேசித்திருக்கிறேன்.

கீர்த்தீசீலன்.—தனயா! உன்னைப் பிரிந்திருப்பதினால் எனக்குண்டாகும் வருத்தத்தைவிட நீ உலகியல் பறிந்து வர பூசஞ்சாரம் செய்துத் திரும்புவதானது எனக்கு சந் தோஷத்தை யுண்டாக்குகிறது. பூசஞ்சாரம் செய்வதினால் அநேக ஆபத்துகள் சம்பவிக்கலாம், உன்புத்தி சாமர்த்தி யத்தினால் அவைகளை வென்று காலதாமதம் செய்யாமல் விரைவில் வரக்கடவாய். பெரும் முயற்சி செய்பவனா னாலும் ஈசன் செயலை மாற்றிவைப்ப தியலாது; மானிட ரால் செய்பவியன்ற தெவ்வளவோ அவ்வளவும் அனுஷ் டிக்கக்கடவாய்.

"மகன் றந்தைக்காற்று முதவி யிவன்றந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்"

என்றபடி என்பெயருக்கு கீர்த்தி கொண்டுவர வேண்டுமா னால் காலம், இடம், தேசம், வர்த்தமானம் முதலியவை களை ஓர்ந்து மனவலி குன்றாமல் நீ சந்திக்கும் மன்னவர் களது நோக்கத்திற் கிணங்க நடந்து மேன்மையான கீர்த்தியுடன் திரும்புவாயாக. நினது தோழனாகிய சுபுத்

தியையும் உடனழைத்துச் செல்லக்கடவாய்.

[சுபுத்தியினிடம் செல்லுதல்.]

சுபுத்தி.—தோழா ! நீ கொண்டிருக்கும் எண்ணம் எற்கெனவே என் தந்தையா லுணர்ந்தேன். நானும் உன்னுடன் பூசஞ்சாரம் செய்ய சித்தப்படுத்திக் கொண்டிருக்கிறேன். ஆனால் பிரபஞ்ச முழுவதும் சுற்றி, அரச வளப்பத்தையும், உலகியல்பையும் அறியவேண்டுமானால் சமுத்திரங்களையும் காடுகளையும் கடக்கக்கூடியதா யிருக்கின்றதே. அதிலும் நம் ஆயுட்காலமெல்லாம் போக்கினாலும் உலக மனத்தையும் சுற்றி வருவதற்குக் காலம் போதுமானதல்லவே. இப்பெரியதோர் காரியத்தை எவ்வாறு முடிப்பதாக உத்தேசித்தனை ? உன்னெண்ணத்தை நினைக்குந்தோறும் என்மனந் திடுக்கிடுகின்றது.

பூபாலன்.—நண்ப ! நன்கு மொழிந்தனை. நான் இக்கஷ்டங்களனைத்தும் முன்னதாகவே யோசித்து அதிசீக்கிரத்தில் இப்பூமண்டலத்தைச் சுற்றி வருவதற்காக தவசிகளின் கிருபையால் ஓர் அஸ்வத்தைப் பெற்றிருக்கிறேன். சமுத்திர வழியானாலும் கரைவழியானாலும் அது நம்மைத் தூக்கிக்கொண்டு அதி சீக்கிரத்தில் செல்லும் சாமர்த்தியத்தையுடையது. நான் என் மனைவியிடஞ் சென்று விடைபெற்றுக்கொண்டு இப்பட்டணத்திற்குச் சமீபத்திலுள்ள நந்தவனத்திற்கு வந்து சேருகிறேன். நீ காலதாமதஞ் செய்யாமல் அவ்விடம் வந்திரு.

---

# அத்தியாயம் 3

## சுந்தரவல்லியின் அரண்மனை.

பூபாலன் உலகியல்பறிய பூபிரதட்சணஞ் செய்ய தீர் மானித்துத் தந்தையிடம் விடைப்பெற்றுச் சென்ற சங்கதி யை தோழிகளாலறிந்த சுந்தரவல்லி அதிக சோகமுற்றவ ளாய் தன் கணவனாகிய இராஜகுமாரன் தன்னைத் தனியாய் விட்டுப் போகிறபடியால் ஆபரணமேதும் அணிந்துக் கொள்ளாதவளாய் அம்புய மலர்போன்ற தனது வதனத் தை இடது கரதலத்தில் சாய்த்து வைத்துக்கொண்டு, இடை விடாது சொரியும் கண்ணீர்ப் பெருக்கினால் வெண்பட்டா டையும் நனைய, வெகு நெருக்கமான சிறியதோர் மஞ்சத் தின்மீ துட்கார்ந்தபடி அழுதுக்கொண்டிருந்தாள். பணி விடை செய்பவர் பலர், சிந்தையுடன் கண்களசையாமல் துயரத்தினால் வாய்ப்பேச்சின்றி வரிசையாய்ச் சூழ்ந்திருந் தனர். அந்தப்புரத்துக் கிழவிமார்கள், ஆங்கு சற்று தூரத்திலிருந்துகொண்டு, அவளைத் தேற்றிக்கொண்டிருந் தனர். அவளது தலையின் மயிர்கள் கோதி முடியப்படா மலே கலைந்திருந்தன. இராஜகுமாரன் வருவதைக் கண்டு, எதிர் கொண்டெழுந்திருக்கும் தன்மனைவியை பூபாலன் அதே மஞ்சத்தில் உடனே உட்காரச்செய்து, தானும் உட் கார்ந்து, கண்ணீர் பெருகுவதற்குப் பொருந்திய காரண மறியாமல், மிகவும் திகிலடைந்து, தனது கரத்தினால் அவள் கன்னங்க ளிரண்டிலும் உதிரும் கண்ணீர்த் துளி களைத் துடைத்துவிட்டு, மனைவியை நோக்கி பூபாலன் இவ்வாறு கூறலானான்:—

பூபாலன்.—"தேவி! மனந்தனில் பெருந் துயரம் நிறைந்து வாய்திறவாமலே நீ ஏன் அழவேண்டும்? உனது இவ்விமைகள் கண்ணீர்த் துளிகளை, நல்முத்துச் சரங்கள்

தொடுப்பதுபோல் உதிர்க்கின்றனவே! மெலிந்து அழகிய மத்தியபாகத்தை யுடையவளே! நீ ஆபரணங்களை யணிந்துகொள்ளலாம லிருப்பதேனோ? இரு செந்தாமரை மலர்களில் இளம் வெயில் விழுந்தாற்போல், உன் பாதங்களிரண்டிலும் செம்பஞ்சுக் குழம்பு என் இடப்படவில்லை? முத்துச் சரமணிந்து கண்டத்தை யலங்கரிக்காம லிருக்கக் காரணம் யாது? ஓ மானினி! கோரோசனைப் பொட்டிடாமலும், தலைமயிரைச் சேர்த்து முடியாமலும் இருப்பதேன்? தேவி! என்மீது அருள்புரிந்து, துயரத்தின் காரணத்தை மொழிந்து விடுவாயாக. நான் எவ்விஷயத்திலேனும் அபராதம் செய்ததுண்டோ? சுந்தரி! மனத் துயரத்திற்கு முகாந்தர மின்னதெனக் கூறுவாயாக.

சுந்தரவலி.—நீர் உலகவியற்கையை, யரிய பூசஞ்சாரம் செய்யப்போகிறதாய் தங்களுடைய தந்தையிடம் விடைபெற்றுக்கொண்ட சங்கதியை என் தோழிகளா லுணர்ந்தேன். எனது உடலும் உயிரும் போன்ற காதலரே! உடலைவிட் டுயிர்பிரிந்தா லவ்வுடலுக்கு என்ன மேன்மையுளது? தாங்கள் என்னைத் தனியாய் விட்டுப்போன பிறகு யானிங்கிருந்து செய்யுங்காரியம் யாது? தேசசஞ்சாரம் தாங்கள் செய்யும்போது பலவகையிலும் கஷ்டங்க ளனுபவிக்கவேண்டி வருமல்லவா? அவ்வித கஷ்டங்களுக்கும் நான் உடனிருந்து அனுபவிக்காமல் இவ்விடமிருந்து சுகத்தையனுபவிக்க மாட்டேன். அப்படிச் செய்வது பதிவிரதைகளுக் கடுத்ததல்ல. புருடனைப் பிரிந்த பூவையிவளென உலகோர் எண்ணும்படி நான் உம்மைப் பிரிந்திரேன். தம்மோடுகூடவே வந்து தங்களுடைய சுகதுக்கங்களைப் பகுத்தனுபவிப்பதே என் கருத்து. ஆகையால் அடியாளையும் தங்களுடன்கூட அழைத்துக் கொண்டுபோக வேண்டுகிறேன்.

பூபாலன்.—பிரியே! நீ இதுவரையில் கஷ்டங்களை யனுபவியாதவ ளானதால் பிரயாணத்தில் ஏற்படும் அல்லல்களுக்குப் பாத்திரமாவாயே யென்று உன்னை இவ்விடமே விட்டுப்போக உத்தேசித்தேன். நீ கட்டாயம் என்னுடன் கூட வர உன் மனதைத் திடப்படுத்திக்கொண்டமையால் உன்னிஷ்டத்திற்கு யான் தடைசெய்யவில்லை. எனது நண்பனான சுபுத்தியும் பிரயாணச் சித்தனாய் நகர்புரத்திலிருக்கும் நந்தவனத்தில் நமக்காகக் காத்திருப்பான், ஆகையால் உடனே பிரயாணப் படவேண்டும்.

[இருவரும் நிஷ்கிரமித்தல்.]

பூபாலனும், சுந்தரவல்லியும் நகரைநீங்கி நந்தவனஞ் சேர்ந்தார்கள். மந்திரி குமாரனான சுபுத்தியும் அவ்விடம் முன்னதாக வந்திருந்தான். உடனே பூபாலன் அஞ்சலி யஸ்தனாய் முனிவரை மனதில் தியானித்து, தனக்கு அருளிய அஸ்வத்தை நினைத்தான். உடனே இருபுறமும் கனக மயமான கடிவாளங்களை யுடையதும், அகில அஸ்வங்களை யும் அதிசயிக்கத் தக்கதான ஓர் அஸ்வம் அவ்விடம் வந்தது. அது ஒருபுருடன் தனதுபுயத்தை உயரத்தூக்கித் தொடக்கூடிய அவ்வளவு உன்னதமான முதுகை யுடையதாகவும், ஜடரக்குழியைப் படபடத்து நடுங்கச்செய்வதும் கர்ண கடோரமுமான அடிக்கடி கனைக்கும் தொனியினால் பொய்யாகவே வேகசாலியென்று கர்வங்கொண்ட கருடனை வெருட்டுவதுபோல் தோற்றுவதாயும் இருந்தது. மேலும் அதன் கால்கள் செதுக்கி, ஒழுங்காக்கப் பட்டது போலவும், மார்பு விசால மாக்கப்பட்டது போலவும், முகம் மழமழவென்று மெருகிடப்பெற்றது போலவும், வேகத்தில் கருத்மானுக்கு எதிரிபோலவும், உலக மனத்தையும்கொண்டு விலைமதிக்கத் தகுந்ததாகவும் காணப் பட்டது, இதுகாறும் தான் பார்த்திராததும், இலட்ச

ணங்கள் யாவும் அமையப்பெற்றதுமான அந்த அஸ்வத்தினது அதிசயிக்கத்தக்க வடிவத்தைப் பார்வையிட்டதும் வெகு தீரத் தன்மையனான பூபாலனது இருதயத்தையுங் கூட ஆச்சரியமானது பரிசிக்கலாயினது.

பூபாலன்.—(சுபுத்தியை நோக்கி) நண்ப! வாசுகியைச் சுற்றிக்கட்டி மந்தர கிரிகொண்டு வெகு விரைவுடன் சுழற்றிக் கடல் நீரைக்கடைந்து, இந்த அஸ்வ ரத்தினத்தைப் பெறாத தேவாசுரர்கள் வேறென்ன இரத்தினத்தைக் கண்டெடுத்தார்கள்? உச்சைச்வரஸ் என்னும் அஸ்வத்தைக் கண்டு வியப்புற்ற மனத்தையுடையவனாகச் செய்து, மஹேந்திரனை சமுத்திரம் வஞ்சனையல்லவா செய்துவிட்டது. பகவானான ஸ்ரீமந் நாராயண மூர்த்தியினுடைய கண்களுக்கு இவ்வளவு காலமாகவும் இவ்வித அஸ்வம் புலப்படாமல் போய்விட்டதல்லவா? ஏனெனில் அவர் இன்னமும் கருடன்மீது ஏறும் விருப்பத்தை விட்டாரில்லை. முனிவர் எனக்கு தெரிவித்தபடி இக்குதிரை நம் மூவரையும் சுமந்துக்கொண்டு அதிவிரைவில் ஆகாயமார்க்கமாய் போகக்கூடியதா யிருக்கிறது" என்று சொல்லி அக்குதிரையின் முன்பக்கத்தில் சுந்தரவல்லியும், மத்தியில் பூபாலனும் பின்னால் சுபுத்தியுமாக ஆரோகணித்தார்கள். உடனே அக்குதிரை வாயுவேகமாகச் செல்லத்தொடங்கிற்று.

பூபாலன்.—எனதாருயிர்க் காதலி! இக்குதிரை எவ்வளவு வேகமாய்ச் செல்லுகின்றது பார்த்தனையா? இதோ நமக்கெதிரில் தோன்றும் வனத்தின் வனப்பே வனப்பு! முன்பு பஞ்சவடி யென்னும் ஓர் இடத்தில் தசரத சக்கரவர்த்தியின் சொற்களைச் சிரமேற்கொண்டு... 

லேன்! அதோ பார் ஓர் பங்கயப்பொய்கை காணப்படு கிறது. அகத்திய முனிவர் கடல் நீரனத்தையும் குடித்துப் பின்பு உமிழ்ந்து அந்நீரை இம்மடுவில் பகுத்து விட்டனர் போலும். அக்குளந்தனில் தாமரைமலர்களது மதுவை யருந்தி மதப்பட்ட காரன்னப் பேடுகள் கலகலவென்று அழகாய் ஆர்ப்பரிக்கின்றன. காற்றினால் அசைக்கப்பெற்ற அலைகளின் உச்சியிலிருந்து உதிக்கும் திவலைகள் மாரி காலத்தைத் துவக்குவனபோல் தோற்றுகின்றன. ஒரு புறம் இறங்கும் இருஷி ஜனங்கள் ஜலம் நிரப்பும் கமண்ட லங்களிலிருந்து தோன்றும் இனிய தொனியால் மனோஹர மாயிருக்கின்றது. நீர்வாழும் தபோதனர்களால் தமது தேவதைகளின் அர்ச்சனைக்காக உபயோகிக்கப் பெற்ற பூக்களை யுடையதும், கொடி வீடுகளிலிருந்து கூத்தாடும் மயில் கூட்டங்களுடன் கூடியதும், பலவகையான புஷ்பங் களின் பரிமளங்களைப் பரவச் செய்வதுமான வனத்தின் வரிசையால் நாற்புரமும் அத்தடாகத்தின் தடம் தழுவப் பட்டிருக்கிறது. அதோ பாராய்! அனவரதமும் தண்ணீ ரருந்த வருகிறவைகளான மிகுந்த சேற்றினால் அழுக் கடைந்த அங்கங்களையுடைய காட்டானைகள் இப்பங்கயத் தை மற்றொரு மாகடலென்று மயங்கித் தண்ணீரெடுக்க இழியும் கார்முகில்கள்போற் காணப்படுகின்றன. இதோ வராஹங்கள் கடித்து மெல்லும் மேன்மையான கோரைக் கிழங்குகளின் கந்தம் கமழுகின்றது. சிங்கத்தினது நகங்க ளால் கும்பஸ்தலங்கள் பிளக்கப் படுவதுபற்றி கீச்சிடும் குஞ்சரங்களது கூக்குரலைக் கேட்டாயா? அதோபார், காட் டெருமைக்கடாக்கள் கொம்புகளின் முனைகளாற் கொந் திய புற்றுகளி லிருந்துப் புழுதி கிளம்புகின்றது. அங்கு மிங்குமாய் அலைந்துத்திரியும் வேடுவக் கூட்டத்தைப் பார்த் தனையா? இடைவிடாது பாணங்களை மாரிபோல் சொரிந்து

ஸ்ரீராமபிரானால் இயமனுக்கு இறையாக்கப் பட்ட கரதூஷணர்களது சேனைகளின் சமூஹமானது ஸ்ரீராம பிரான்பால் தீங்கெண்ணிய தோஷத்தால் பிசாசங்களாகப் பிறந்து வந்தவர்கள்போலப் புலப்படுகிறார்கள். அவ் வேடர்கள் அம்புகளாலடித்த கேசரியினுடைய கர்ஜனை யினாலும், வேட்டை நாய்கள் வெகுவேகமாக அவயவங் களைக் கடித்துப் பிடுங்குவதால் திகிலடைந்து அங்குமிங் கும் வெருண்டு விழிக்கும் கருவிழிகளையுடைய கலைமான்க ளினது கருணைபுரியக்கூடிய கூக்குரலாலும், விருக்ஷங் களின் உச்சிகளிலிருந்து உயரக்கிளம்பி வெகு பரபரப் புடன் பறக்கும் பறவைகளின் ஆரவாரத்தாலும் இவ் வடவியெல்லாம் அசைக்கப் பட்டதுபோல் காணப்படு கிறது. காதலி! இதோ சமுத்திரதீரம் வந்துவிட்டோம். இன்னும் சற்று நேரத்திற்கெல்லாம் அக்கரைசேருவோம்.

சுந்தரவல்லி.—நாதா! என்னை நகரத்தின் கண்ணே விட்டுத் தாங்கள் மாத்திரம் வந்திருப்பீரானால் இவ்வதிசயங் களையெல்லாம் நான் எப்படி பார்க்கக்கூடும்? ஆஹா! இவ்வாழியில் அலைகள் படிப்படியா யுயர்ந்து கோஷித்து கரையில்வந்து மோதி முத்துக்களையும் இரத்தினங்களையும் கரையிலொதிக்கி, பின் இச்சமுத்திரத்திலேயே சென்று விடுகின்றது.

பூபாலன்.—ஆம். இத்திவலைகளை நோக்கினவுடன் திருமழிசைப்பிரா னருளிச்செய்த.

தன்னுளே திரைத்தெழுந்தரங்க வெண்டடங்கடல்
தன்னுளே திரைத்தெழுந்தடங்குகின்ற தன்மைபோல்
நின்னுளே பிறந்திருந்து நிற்பவும் திரிபவும்
நின்னுளே யடங்குகின்ற நீர்மை நின்கண் நின்றதே."

என்கிற பாசுரம் ஞாபகத்திற்கு வருகிறது. மாதே! அதோ பார், மச்சங்களானது உன் கண்களைப் பார்த்து தன்னின

மென்று நினைத்து ஜலத்தின்மேலெழுந்துபார்த்து உடனே உனது புருவங்கள் கூரிய வேலாயுதங்கள்போல் அவைகளுக்குப் புலப்பட்டவுடன் ஜலத்தில் மூழ்கி ஒளித்துக் கொள்ளுகின்றன. தவிர ஜலமானது நிர்மலமாய் உள்ளிருக்கும் வஸ்துக்களும் தெரியக்கூடியதா யிருக்கிறது.

[சுந்தரவல்லி சற்றுக்குனிந்து பார்க்கவும் அஸ்வத்தின் முதுகின்மீதிருந்து நழுகி சமுத்திரத்தில் விழிந்தாள். உடனே சுபுத்தி அவளை எட்டிப்பிடிக்கப் பிரத்தினப்பட்டதும் அவனும் சமுத்திரத்தில் விழுந்துவிட்டான்.]

பூபாலன்.—ஆ! என் ஆருயிர்க்காதலி! ஆ! என் பிரியநேசா! இனியென்ன செய்வேன்? இருவரும் இச் சமுத்திரத்தில் விழுந்து ஆழ்ந்து விட்டனரே! கிணறு வெட்டப்போகப் பூதப் புறப்பட்டதுபோ லாயிற்றே. நான் பூபிரதட்சணம் செய்து உலகியல் அறியப் புறப்பட்டது இதற்குத்தானே? ஆ! என் கண்மணி! ஆ! என் மனோநாயகி! எவ்வாறுன்றன் பிரிவைச் சகிப்பேன். என் மனதுக்கிசைந்த மயிலே! உன்னையான் என்று காண்பேன்! நண்பா! உன்னை விட்டுப்பிரிந்து நான் எங்கென்று செல்வேன்? ஆ! என் பிரியசகி! நான் கண்ணிழந்தவனானேனே! திசைகள் யாவும் என்றனக்குப் பாழடைந்து விட்டனவே! நான் உயிர் பிழைத்திருப்பது இனி உபயோகமற்றது. இவ்வுலகமெல்லாம் எனக்கு இனி இன்பமில்லாதவை. இனி எவருடன் நடமாடுவேன்? எவரோடு சல்லாபம் செய்வேன்? பலவகையினும் பரிஹரிக்கக் கூடாத ஆபத்துவந்து நேர்ந்ததே. இப்பொழுது யான் செய்யத்தகுந்தது யாது? நடக்கவேண்டிய விதம் என்ன? எத்திசைக்குப் போகலாம்? கதியென்ன? உபாயம் யாது? புகலிடம் யாது? எந்த சாமர்த்தியத்தினால் எவ்வித யுக்தியினால் எந்தெந்த வகையினால், எந்த ஆதாரத்தினால், எந்த

அறிவால், நான் என் காதலியையும் நண்பனையும் காணப் போகிறேன். ஏ! ஜெகதீசா! உன் திருவடியைத் தஞ்சமென்பதே தவிர வேறு எனக்கு ஒன்றும் தோன்றவில்லை.

“ நீரகத்தாய்! நெடுவரையி னுச்சிமேலாய்!
நிலாத்திங்க ளுண்டத்தாய்! நிறைந்தகச்சி
ஊரகத்தாய்! ஒண்துறைநீர் வெஃகாவுள்ளாய்!
உள்ளுவா ருள்ளத்தாய்! உரகமேத்தும்
காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா!
காமருபூங் காவிரியின் தென்பால்மன்னு
பேரகத்தாய்! பேராதென் நெஞ்சினுள்ளே!
பெருமானுன் திருவடியே பேணினேனே.
(அவ்வத்தின் மேலேயே மூர்ச்சித்துச் சாய்தல்.)

---

## அத்தியாயம் 4

### ஆழியில்விழுந்த சுந்தரவல்லி கரைசேர்தல்.

சுந்தரவல்லி.—ஆ ஹா! இஃதென்ன இவ்வண்ணம் நேர்ந்தது? அநாதை யாயினேனே! என் நாதர் என் பிரிவாற்றாமையினால் என்னபாடு படுகிறாரோ. இவ் வாழியில் யான் தவறிவிழுந்தும் நான் முழுகிப்போகா வண்ணம் ஓர் துண்டுப்பலகை என்கரத்தில் தெய்வாதீனமாய் அகப்பட்டது. பிராணநாதா! யான் தங்களிடம் யாதுபிழை செய்தேன்? என்னால் தங்களுக்குச் செலுத்தப்படாத கடமை யாது? தங்களுடைய எந்த ஆஞ்ஞையை நான் ஆதரிக்கவில்லை? கிருபாநிதியாகிய கடவுள் ஏன் என்னைப் பிரிக்க வேண்டும்? ஐயோ! அலைகளால் மோதுண்டு சரீரமெல்லாம் நடுங்குகின்றதே! உம்மைப் பிரிந்தும் நான் இன்னும் உயிர் பிழைத்திருக்கின்றேனே. ஆ! துரதிஷ்டசாலியான நான் அநியாயமாய் அழிந்து விட்டேனே. இனி யான் என்னசெய்வேன்? சர்வவல்லமையும் வாய்ந்த விதியல்.

லோ மேலானது? தெய்வச்செயலோ மிகவும் வலுவானது. வெகு கடோரத் தன்மையான பாழுந் தெய்வத்தின் பொல்லாத செயல்களோ, சுபாவமாகவே மிக மனோஹரமாயுண்டான பிரீதியை வெகுநாட்கள் நீடித்திருக்க ஸகிப்ப தில்லையே. புருடனுடன் உலகியல்பறிய சந்தோஷப்பட்டுவந்த யான் சடுதியில் இக்கஷ்ட மனுபவிக்க சம்பவித்தது. ஆனதுபற்றியே பெரும்பாலும் இன்பங்களெல்லாம் இயல்பாகவே குறுகியவைக ளாதலால் திடீரென பங்கத்தைப் பெறுகின்றன. துன்பங்களோ மிகவும் நீடித்திருப்பவை யாதலால் நான் இக்கஷ்டத்தை யனுபவிக்கலானேன். ஆ! நாதா! தமது கதி எவ்வாறாயிற்றோ? அந்தப்பாழான அஸ்வம் தங்களை எங்கு கொண்டு போய் சேர்த்ததோ? அல்லது என்னுடன் தாங்களும் இச்சமுத்திரத்தில் வீழ்ந்து அழிந்துபோனீரோ? அல்லது எவ்விடம் சேர்ந்து தவிக்கின்றீரோ? அல்லது யான் மாண்டுபோனதாய் நினைத்து ஜீவனைத் துறந்தீரோ?

இவ்விதமாக சுந்தரவல்லி சோகமுற்று, மூர்ச்சையடைந்து தான் கைப்பற்றியிருந்த பலகையின்மேல் சாய்ந்துவிட்டனள். அப்பலகை சுந்தரவல்லியுடன் அன்றிரவெல்லாம் அலைகளினு லலைப்புண்டு ஓர் தீவின் கரையி லொதுக்கிற்று. விடியற் காலமானதால் காரன்னங்களின் ஆர்ப்பரிப்பு சுந்தரவல்லியின் காதுகளுக்கு இன்பமாய் இசைந்தெழும்பியது. தனது கண்களை மெள்ள விழித்துப் பார்த்தனள்; அத்தீவிலுள்ள விருக்ஷங்களானது உதயகிரிச் சிகரத்தில் வந்துதித்த ஆதித்தனை நோக்கிப் பனித்துளிகளால் நன்கு நனைந்த தாதுக்களுடன்கூடிய புஷ்பங்களைத் தளிர்களாகும் அஞ்சலிகளைக் கொண்டு அர்க்கியம் விடுவதுபோல் உதிர்த்ததைக் கண்டாள். பிரகாசமான சோதியுடன் சூரியனும் உதயமானான்.

சில ஆண்டுகளுக்கு முன் அங்கதேசத்துப் பிராம்மணர் ஒருவர் சம்சாரம் சாரமற்றதென உணர்ந்து அன்பானது அதிக துன்பத்தைத் தரக்கூடிய தென்பதையும் ஆலோசித்து, இன்பங்களனைத்தும் திடீரென அழியுங்குணமுடையவை யென்பதையும் நிச்சயித்து, தாய் தந்தையரையுங் கவனிக்காது, உறவினர் அனைவரையும் பரிஜனங்களுடன் பரிஹரித்து, சிற்றின்பங்களி லிருந்து சித்தத்தைத் திருப்பி, இந்திரியங்களையும் இறுகக்கட்டி பிரம்மசார்ய விரதத்தைக் கைப்பற்றியவராய் இத்தீவுக்கு வந்து, மரவுரி தரித்து, தீவினை நிறைந்ததும், பல்லாயிரந் துன்பங்களுக்கு இருப்பிடமுமான இப்பாழு முடலை பலவகையான நியமங்களாலும் உலர்த்தி, திரிகால ஸ்நானம் அனுஷ்டித்து, காடுகளிலிருக்கும் காய் கிழங்கு தண்ணீர் இவைகளை யருந்தி, கடவுளை ஸ்மரித்துக்கொண்டு வருகிறார். அவர் அன்று காலையில் சமுத்திரத்தில் ஸ்நானம் செய்வதற்காக வந்ததும் சுந்தரவல்லி சோகத்தினால் களைத்து நிலத்தில் சாய்ந்திருப்பதைப் பார்த்து ' இதென்ன புதுமை! இந்த நிர்மானுஷியமான தீவில் இச்சுந்தரவதி எவ்வாறிங்கு வந்திருக்கக்கூடும்? அம்மா! நீயார்? இங்கு எவ்வாறு வந்தனை? உன்னைப் பார்க்கில் இராஜவம்சத்தில் சேர்ந்தவளாகக் காணப்படுகிறது. உன் வதனத்தைப் பார்த்தால் அதிக விசனத்தில் ஆழ்ந்திருப்பதாகத் தெரிகிறது. உன் விருத்தாந்தத்தைத் தெரியப்படுத்தினால் என்னால் கூடியவரையில் உனக்கு ஒத்தாசைச் செய்கிறேன்'' என்றார்.

சுந்தரவல்லி.—ஆ! சர்வவல்லமையுள்ள கடவுள் கிருபையை நான் என்னவென்று புகழ்வேன்! ஆழியில் விழுந்த என்னை இறக்கவொட்டாமல் ஓர் துண்டு பலகையை எனக்குதவிசெய்து, கரைசேர வைத்து, பின்னும் என்னைக் காப்பாற்ற யோகி வடிவம்கொண்டு என்முன் தோன்றி

னர்போலும். "ஐயன்மீர்! என்னைப்போன்ற துர் அதிஷ்டசாலியும் உலகத்தி லுண்டோ? யான் தாராதேசத்து இராஜன்குமாரத்தி; என் பெயர் சுந்தரவல்லி; என்னை மணம் புரிந்தவர் விதர்ப்பதேசத்து அரசகுமாரராகிய பூபாலன்; அவர் உலகியல்பறிய ஆசைகொண்டு மந்திரி குமாரனுடன் என்னையும் அழைத்துக்கொண்டு ஓர் முனிவர் உதவிய அஸ்வத்தின்மீதாரோகணித்து ஆகாயமார்க்கமாய்ச் செல்லுங்கால் யான் தவறி ஆழியில் விழுந்துவிட்டேன். ஓர் துண்டுப் பலகையின் உதவியால் தெய்வாதீனமாய் இங்குவந்து சேர்ந்தேன். தங்களைக் கண்டதும் ஆனந்தமடைந்தேன். எனதாருயிற் காதலர் எவ்வாறுயினரோ? யான் அறியேன்."

யோகீஸ்வரர்:—அம்மா! நீ துயருறுதே. எல்லாம் ஈசன் செயலின்படி முடியும்.

"ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றியது வரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாது முன்வந்து நிற்பினு நிற்கும்
எனையாளு மீசன் செயல்."

என்றபடி, விதியைக்கடக்க யாராலாகும்? ஆகையால் நீ உன் விசாரத்தை யொழித்து நற்காலம் வருமளவும் காத்திருக்கவேண்டும். ஓ பாக்கியவதி! உன் மனோ துயரத்தை ஆற்றல் செய்வதற்குப் போந்த திருஷ்டாந்தமாக ஓர் சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக:—கனகபுரியின் அரசகுமாரியாகிய பத்மாவதிக்கு வயது நான்கானதும் தாய்தந்தைக ளிருவரும் இறந்துபோனபடியால் மந்திரி, பிரதானி, படைத்தலைவர், குடிகள் முதலானவர்களே கோபித்து பத்மாவதிக்கு இளவரசு பட்டங் கட்டினார்கள். மந்திரி மதியூகி என்பவர் பிரதிநிதியாக அரசாண்டு வந்தார். பத்மாவதி சகலகலை வல்லவளாகி தேச காரியங்

களைச் செங்கோல் வழுவாது நடத்தும் முயற்சியைக் கைக்கொண்டு பட்டத் துரிமையை யடைந்து அரசாளும்படியான போந்த பிராயம் வந்தது. ஆனால் துர் தசையானது செங்கோல் பிடித்து அரசாளுவதற்குப் பதிலாய் உன்னைப் போல் நிர்பாக்கியத்தை அநுபவிக்கும்படி நேர்ந்தது. எவ்வாறெனில், நெடுநாளைக்கு முன் தேசாந்தரம் சென்றிருந்து இறந்துபோனதாகக் கருதியிருந்த பத்மாவதியின் சிற்றப்பனுன குலசேகரன் என்பான், பட்டணத்திற்குள் பிரவேசித்து தனக்குச் சிநேகிதர்களா யிருந்த பல்பெரிய மனிதர்களுடைய வொத்தாசையைக் கொண்டு, அரசைக் கபடமாய் அபகரிக்க வேண்டுமென்ற அப்பிராயத்துடன் குடிகளை பத்மாவதிக்கு விரோதிகளாக்கினுன். இதைப் பற்றி மந்திரி மதியூகி எவ்வளவு பிரயாசைப்பட்டும் கடைசியில் குலசேகரனுக்கே ராஜமுடியைச் சூட்டி சிம்மாசனத்தி லேற்றினுர்கள். குலசேகரன் அரசாட்சியைக் கைப்பற்றிக் கொண்டதும் பத்மாவதியைக் கபடமாய்க் கொல்லப் பிரயத்தனம் செய்துகொண்டிருந்தான். இதையறிந்த மந்திரி தன் மனைவியுடன் பத்மாவதியையும் அழைத்துக்கொண்டு இரவில் யாருக்கும் தெரியாமல் பிரயாணப்பட்டு சுவர்ணபுரியென்னும் நாட்டைச்சேர்ந்து தனக்குத் தெரிந்திருந்த சித்திரம் எழுதும் தொழிலை நடத்திக்கொண்டு ஜீவனம் செய்துகொண்டு வந்தான்.

பத்மாவதி இராஜவம்சத்தில் அதிக செல்வாக்கி லிருந்தபடியால் மந்திரியினுல் கிடைக்கும் பொருள் ஜீவனம் சைக்கேபோதாமல் அதிக தாரித்திரிய தசையையடைந்து வந்தாள். மந்திரி மதியூகி அதிக சாமர்த்தியமாய் படம் எழுதுவதை அந்நகரத்திலுள்ளா ரனைவரும் பார்த்ததிசயித்து அரசனுக்கறிவிக்க அரசன் மதியூகியினுடைய வீட்டுக்குப்போய் அவருடைய சுகுணத்திற்காகவும் சாதுர்யமான

பேச்சுக்காகவும் சந்தோஷமாக அவருடன் சம்பாத்ஷி துக்கொண்டிருந்தான். பத்மாவதி அரசனைப் பார்ப்பதற் காக அங்குவந்தனள். அரசன் பத்மாவதியைப் பார்த்து அவள்மேல் அதிக காதல்கொண்டவனாய் பிரதிதினமும் அவ்வீட்டுக்கு வருவதும் போவதுமா யிருந்தான்.

மந்திரி மதியூகி அரசனுடைய கருத்தை அறிந்து பத்மாவதியைத் தன்னருகிலழைத்து, "அம்மா! அரசன் நல்ல பாலியனாகவும் சுந்தர முள்ளவனாகவு மிருக்கிறான். உன்மேல் அதிக காதலுள்ளவனாகப் புலப்படுகிறது. அவன் அப்படி தன்காதலை உனக்குத் தெரிவிக்க சமயம் வாய்ந்த போது உன்னைச் சகலருமறிய மணஞ் செய்துக்கொண்டு பட்டத்தரசியாக்க உடன்படுவானே யானால் நீ அவனு டைய எண்ணத்திற்கு உடன் படுவாயாக" என்று சொன் னார். அரசன் ஓர்நாள் பத்மாவதியினிடம் வந்து தன் கா தலை தெரிவித்ததுடன் சகலருமறிய மணஞ்செய்துக் கொ ண்டு பட்டத்தரசி யாக்குவதாகவும் வாக்களித்தார். பத் மாவதி மிகவும் சந்தோஷமடைந்து தன் சரித்திரத்தை ஆதியோடந்தமாகத் தெரிவித்தாள். அரசன் பத்மாவதி யை நோக்கி, "பெண்ணே! நீ எனக்குப் பட்டத்தரசி யான பிறகு உன்னைத் துரோகம் செய்து ராஜ்ஜியத்தை உன்னிடம் அபகரித்துக்கொண்டு உன்னைக்கொல்ல நினை த்த குலசேகரனைப் பழிக்குப்பழி வாங்கி உன்னையே கனக புரிக்கு இராணி யாக்குகிறேன்" என்றுசொல்லி சகலரு மறிய பத்மாவதியைப் பாணிக்கிரஹணம் செய்துக் கொண்டனர். விவாகம்நடந்த மறுதினமே அரசன் படைத்தலைவர்களை கனகபுரிக்கு அனுப்பி பத்மாவதியைத் தான்மணஞ் செய்துக்கொண்டமையால் இனி பத்மாவதி யே கனகபுரிக்கு இராணியாக வேண்டுமென்றும், அப்படி குலசேகரன் ஒப்புக் கொள்ளாவிடில் யுத்தத்துக்கு வருவ

தாகவும் குலசேகரனுக்குத் தெரிவிக்க ஏற்பாடு செய்தான். ஆனால் குலசேகரன் இச்செய்தியறிந்ததும் யுத்தத்திற்குத் தான் ஆயத்தமா யிருப்பதாகவும், அரசரை பத்மாவதிக்கு ஒப்புவிக்க இயலாதென்றும் தெரிவித்ததின்மேல், அரசன் படைவீரர்களை ஒருங்கு சேர்த்துக்கொண் டிருந்தான். இத்தருணத்தில் குடியானவ னொருவன் அதிதீவிரமாக பத்மாவதியினிடம் வந்து, "அம்மா! குலசேகரன் சில நாட்களாய் வியாதியுட னிருந்து பரலோகப் பிராப்தியானன்; கனகபுரியில் குடிகளனைவரும் உம்மைப் பட்டத்தரசியாக்க ஏக சிந்தையோடு நிர்ணயித்துக்கொண் டிருக்கிருர்கள்; இனி தாங்கள் காலஹரணம் பண்ணுமல் விரைவில் வரவேண்டும்" என்றான். பத்மாவதி இச்செய்தியை அரசனுக்கறிவித்ததும், யுத்தத்திற்காக ஆயத்தப்படுத்தின போர் வீரர்களை தம்தம் பதிக்கேகும்படி உத்தரவு செய்து, மந்திரி மதியூகியை பத்மாவதிக்குப் பதிலாக கனகபுரியில் பிரதிநிதியாக விருந்து அரசாளும்படு ஏற்பாடு செய்தார். மந்திரி மதியூகியும் பிரயாணத்திற்குச் சித்தப் செய்துக்கொண் டிருந்தார்.

அம்மா, சுந்தரவல்லி! காலவித்தியாசங்கள் எவ்வாறு ஏற்படுகின்றனவோ? இதைச் சற்று கவனமாய் கேட்பாயாக.

பத்மாவதி வழக்கப்பிரகாரம் அரசனுடைய படுக்கையறைக்குச சமீபமாய்ப் போகிறபோது அங்கு அகோர ரூபத்தையுடைய ஆவேசமொன்று பத்மாவதிக்கு எதிரில் தோன்றி அவளைக் கூச்சலிடும்படிச் செய்தது. இக்கூச்சலைக்கேட்ட அரசன் நித்திரைப் பங்கமாகி எழுந்து வெளியில்வந்து, பத்மாவதியை உற்றுப்பார்த்து, அவள் யாரென்றும் அவள் பெயரென்னவென்றும், கூச்சல்போட்டதற்குக் காரணமென்ன வென்றும் விசாரித்தார். இக்

கேள்விகளினுல் பத்மாவதி ஆச்சரியப் பட்டவளாய் தான் அகஸ்மாத்தாய்க் கண்டுபயந்த ஆவேசத்தின் சங்கதியைத் தெரிவித்தாள். அரசன் பத்மாவதியை நோக்கி, “நீ பயப்படாதே, நீ கண்டுமிரண்ட அகோரக் காட்சியை விட நான் உன் பிரத்தியட்சபேத ரூபத்தால் திகிலடைந்திருக் கிறேன். நான் இப்படிச் சொல்வதற்காக நீயும் அதிசயிக் காம லிருக்கமாட்டாய். என்மனைவியும் பட்டத்தரசியு மாகிய பத்மாவதி இதோ என் படுக்கையின்மீது சயனித் துக் கொண்டிருக்கிருளே. நீயாரென்று எனக்கு விளங்க வில்லை. நீ அவளது ரூபத்தை யெடுத்துக்கொண்டு என் மனைவிதானென்று சொல்லத் தக்கதாய் மாரீசங்கொண்டு வந்திருக்கின்றனையே” என்றார். அரசன் மொழிந்தவை களைக் கேட்ட பத்மாதி திகிலையும் கலக்கத்தையு மடைந்து அரசனுடைய மஞ்சத்தை யணுகிப் பார்த்தவுடன் தன்னைத் தானே நிந்தித்துக் கொள்ளும் விதமாய் தன் சாயலை யொத்த பேரழகுடைய ராஜஸ்திரீ நித்திரைச் செய்யக் கண்டு ஆச்சரியப்பட்டு, அங்கம் பதைத்து சிந்தனை யுற்றவ ளாய் கோவென்றலரிக் கூச்சலிட்டாள். அரசனுடைய மஞ்சத்தில் படுத்திருந்தவள் இக் கூச்சலினுல் விழித்தெழு ந்து பத்மாவதியைப் பார்த்து, “அடி பாதகி! நீ மோசம் பண்ணி என் வாழ்வைக் கைப்பற்ற என்சாயலையும் பேர ழகையுங்கொண்டு வந்தனையோ? நீ அஞ்சாது நெஞ்சு படைத் திவ்விடம்வர உனக்கு வெட்கமில்லையா? என் நாயகனை என்னைவிட்டுப் பிரியும்படிச்செய்து என்னைப் பஞதியாக்க என்சாயலை எடுத்துவந்தனையா? நீ ஓர் மாந் திரீக ஸ்திரீயென்று அரசன் உன்னை அறிந்துக்கொள்ளு வார். நீ எடுத்துவந்த மாரீசவேஷத்தால் அரசனுக்குரிய மனைவி நீயோ நானேவென்றரசன் மயங்கும்படி செய்தனை யல்லவா! உன்னெண்ணம் இங்கு பயனற்றது” என்று

கடுகடுத்துப்பேசி அரசனைப் பார்த்து, "ஆ! எனது பிரியநாயகா! இவளைக்கண்டு நீர் கவலைப் படவேண்டாம். என்னை மோசஞ்செய்யக் கருதி என்ரூபத்தை எடுத்துக் கொண்டுவந்த மாந்திரீகஸ்திரீ இவள். இப்பொழுதே இவளைச் சிறைப்படுத்தி நாளையதினம் அக்கினி குண்டத்தில் போட்டு தகனித்துவிட உத்திரவு செய்யுங்கள்" என்றாள்.

இவையனைத்துங் கேட்ட பத்மாவதி பதில்சொல்வதின்னதென்றுந் தெரியாமல் துக்க மதிகரித்தமையால் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாய்ச் சொரிய அரசனை நோக்கி, நாதா! எதார்த்தமாய் நானே உமது சொந்த நேசமனைவி, என் பாக்கியத்தைப் பார்க்கச் சகிக்காமல் பொறாமை யடைந்தவர்கள், மோகனாங்கி என்னும் பைசாசைத்தூண்டி இவ்வாறு ஏக்கத்துக் குள்ளாக்கி யுள்ளார்கள். நானே கனகபுரியின் இராஜகுமாரத்தி. சர்வேந்திரியாமியாகிய கடவுளொருவரே இதற்குச் சாட்சி! என்றாள்.

இதைப் படுக்கையிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த மாயமனைவி பரப்பரப்புடனெழுந்து, "அடி பாதகி! நீ மெய்போலும் பொய்யைப் புகட்டிப் பேசுகிறாய். நீ சொரியும் கண்ணீரினாலும், நீ காட்டும் நீலித்தனத்தினாலும் நீ பெரும் துரோகியென்று வெளிப்படுத்துகிறது" என்றாள்.

இச்சம்பாஷணைகளால் அரசன் கலக்கங்கொண்டு இருவரில் யார் தனக்குப் பட்டத்தரசி யென்று நிச்சயமறிந்துக் கொள்ளக் கூடாதவராய் "நீங்கள் வார்த்தையாடுவதை சற்று நிறுத்துங்கள். இதனால் என் சந்தேகம் நிவர்த்தியாகவில்லை. உங்களிலொருத்தி பட்டத்து ஸ்திரீயாகவும், மற்றொருத்தி என்னை மோசஞ் செய்யவந்த மாயக்காரியாகவு மிருக்கவேண்டும். என்னைக் கலகத்துக் குள்ளாக்கினவள் இன்னாளென்று நான் தெரிந்து கொண்டால் அவளுக்குத் தக்க சிட்சை செய்வேன்." என்று

சொல்லி இருவரையும் அன்றிரவெல்லாம் பிரத்தியேகமாய் இருக்கும்படிச் செய்து பொழுது விடிந்ததும் மந்திரி மதியூகியையும், அவரது மனைவியையும் அழைத்து நடந்த சவிஸ்தாரங்களை யாவும் மொழிந்து கனகபுரியின் ராஜகுமாரத்தியாகிய பத்மாவதி இன்னாளென்று தெரிந்து சொல்லும்படிக் கட்டளையிட்டார். மந்திரி மதியூகியும், அவர் மனைவியும் குழந்தைப் பருவத்திலிருந்து பத்மாவதியை நன்று யறிந்தவர்களானதால், ஒரே ரூபந்தரித்திருந்த இருவரையும் பரிசோதனை செய்து, பத்மாவதி இன்னாளென்று அறியக் கூடாதவர்களானார்கள். அரசன் சங்கத்தாரையெல்லாந் தமது சபைக்கழைத்து அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்டபோது நியாயாதிபதிக ளெல்லாம் ஒன்றாய்க்கூடி ஆலோசித்து அரசனுடைய மஞ்சத்தில் சயனித்திருந்தவளே பட்டத்தரசி யாகவேண்டு மென்றும், மற்றொருத்தி மோசஞ் செய்யவந்த மாந்திரீக ஸ்திரீ யென்றும், அந்த மோசக்காரியை அக்கினிக் கிறையாக்குவதே தக்கதண்டனை யென்றார்கள். அரசன் இத்தீர்ப்பைக் கேட்டதும் சகியாதவராய், ஒருவேளை காரிய மெப்படி யாமோவென் றாலோசித்து "என் கண்முன்பாக ஸ்திரீ ஹத்தி செய்வது தகுதியல்ல, ஆகிலும் என்னை வஞ்சித்தற் பொருட்டுவந்த அந்தத் துரோகியை இனி என் முன்வரவொட்டாமல் என் அரண்மனையி னின்றும் துரத்தி, காட்டில் விட்டுவிடுவதே தகுதி" என்றார்.

உடனே அரசனுடைய உத்திரவுக்கு எதிர் பார்த்திருந்த பணியாட்கள் பத்மாவதி தரித்திருந்த உடைகளையும் ஆபரணங்களையும் கழற்றிக்கொண்டு கந்தலை உடுத்திக் கொள்ளச்செய்து அரண்மனையைவிட் டப்புரப்படுத்தி காட்டில் கொண்டுபோய் விட்டுவிட்டார்கள். அரசகுமாரத்தியும் மற்றோர் அரசனுக்கு மனைவியுமாயிருந்த பத்மாவதி

யின் தற்காலஸ்திதியை என்னவென்று புகல்வது. அவ ளுடைய விதிவழி எவ்வாறு கொண்டுவந்து விட்டது பார்த்தனையா? பத்மாவதி அக்காட்டில் காய் கனி கந்த மூலங்களைப் புசித்துக்கொண்டு சிலநாட்கள் கழிக்கையில் வேட்டையாடச் சென்றிருந்த ஓர் அரசகுமாரன் பத்மா வதியைப் பார்த்து அவளுடைய விருத்தாந்தத்தை விசா ரித்து மிகவும் வ்ருத்தமடைந்து, "ஓ பாக்கியவதி! இனி நீ உன் கஷ்ட காலங்களுக்காக துயரப்பட வேண்டாம். உன் நாயகரையும் போக பாக்கியங்களையுய் அதி சீக்கிரத் தில் அடைவாய்" என்றிவ்வாறு பேசிக் கொண்டிருக்கை யில், இவர்களுக்கெதிரில் வஸ்திரங்க ளொன்று மில்லாம லும், நிராயுத பாணியாயும் ஒருவன் குதிரையின்மே லேறிக்கொண்டு அதிவேகமாய்ச் சென்றான். பத்மாவதி அவனைக்கண்டு, "ஆ! தெய்வமே இதோ என் புருடன் அதிவேகமாய்ச் செல்கின்றாரே, என்னைக் கடைக்கண்ணா லும் பார்த்தாரில்லையே" என்று பிரலாபித்தாள். இதற் குள் வேறொருமனிதன் குதிரையின்மே லேறி அதிகவேகத் துடன் முன்சென்றவனைத் தொடர்ந்து உயிர்ப்பழி வாங்கு பவன்போல் உருவின உடைவாளுடன் சென்றான். பத்மா வதி அம்மனிதனை உற்றுநோக்கி முன்போலவே,"ஆ இதெ ன்ன புதுமை! இதோ என்புருடன் என்னைக் கடைக்கண் ணாலும் பார்த்தாரில்லையே! முன் குதிரையின்மேல் சென்ற வருக்கும், இப்போது செல்கின்றவருக்கும் ரூபத்தில் யா தொரு வித்தியாசமும் இல்லையே. இதைவிட ஆச்சரியப் படத்தக்கது வேறென்ன இருக்கிறது?" என்று சொல்லிக் கொண் டிருக்கையில், மற்றோர் மனிதன் குதிரைமேலேறி அதிவேகத்துடன் வருவதைக் கண்டு அரச குமாரனும், பத்மாவதியும் கிலேசமுற்றார்கள். அம்மனிதன் சமீபத் தில் வரவே அவன் மந்திரி மதியூகியா யிருக்கக் கண்டனள்.

பத்மாவதியைக் கண்டதும் மந்திரி குதிரையை விட்டி றங்கி, பத்மாவதியின் பாதத்தில் விழுந்து நமஸ்காரஞ் செய்து, "மண்டலத்தோர் புகழ்ந்துபோற்றும் அன்னை யே! உம்மை இங்கு கண்டுகளிக்க யான் என்ன பாக்கியஞ் செய்தேன்? இதுவரையிலும் உம்மை இந்த ஆரணியத்தில் காப்பாற்றிய கடவுளுக்கு துதிசெய்கிறேன். நீர் அரச னுக்கு குற்றமொன்றுஞ் செய்யாதிருந்தும், உம்மைச்சிறிது காலம் சிறுமை யனுபவிக்கும்படி கடவுள் நிர்ணயித்தி ருந்தனரோ? இப்பொழுது நீர்பட்ட சிறுமை பெருமை யாகவும், துன்பம் இன்பமாகவும் மாறுதலடையக் காலம் சமீபித்தது, இனி நீர் சஞ்சலப்பட வேண்டியதில்லை. உம் முடைய இக்கோலத்திற்குக் காரணமாயிருந்த உமது சத் துருக்களுயிர் இனி நீடித்திருக்கப் போகிறதில்லை. உம்மை மோசப்படுத்தி உமது ரூபத்தைத் தரித்திருந்த அந்த கபடஸ்திரீயை அரசன் தமது வாளுக்கிரை யாக்கிவிட்டார். அவளை வெட்டின உதிரம் இன்னம் உடைவாளில் ஈர மாகவே யிருக்கிறது. ஆனால் அரசனுடைய ரூபத்தைத் தரித்து கபடவேஷதாரியாய் அவள் பக்கத்தில் அரண் மனையில் சயனித்திருந்த துரோகியை மாத்திரம் வெட்டக் கைதடுமாறி விட்டுவிட்டதினால் அவனைக் கொல்ல அரசன் பின்தொடர்ந்து போகின்றார். உம்மை அவமானப்படுத்தி கோட்டையைவிட்டுத் துரத்தி விட்டது முதல் இதுவரை யில் நடந்த சரித்திரத்தைச் சொல்ல இப்போது காலம் போதாதாகையால் இன்னொரு சமயம் தெரிவிக்கிறேன் நீரும் இக்குதிரையின்மேல் ஏறிக்கொள்வீரானால் நாமிரு வரும் அரசனைத் தொடர்ந்துபோய் அவ்விடம் நடந்த முடிவான சமாசாரங்களை யறிந்துத் திரும்பலா மென்றார்.

இவையனைத்தும் கேட்டுக்கொண்டிருந்த அரசகுமா ரன் தான் வேட்டையாடவந்து பத்மாவதியைப் பார்த்தது

முதல் மந்திரியினிடஞ் சொல்லி, "ஐயா! நீர் அரசியுடன் இவ்விடத்தில் தானே இருந்தால் நான் அரசிக்குப்பதிலாய் அந்த சிரமத்தை ஏற்றுக்கொண்டு அரசனைத் தொடர்ந்து போய் அங்கு நடக்கும் சங்கதியை அறிந்துக்கொண்டு அரசனையுங் கையுட னழைத்துக்கொண்டு வருகிறேன்" என்றுசொல்லி துரிதமாய்க் குதிரையின்மேலேறி அரசனைத் தொடர்ந்து சென்றான். மந்திரி பத்மாவதியை நோக்கி, "மாதாவே! உமது அரசன் அந்த மாந்த்ரீக ஸ்திரியே கனகபுரியின் ராஜகுமாரத்தியாகிய நீயேயென்று சில நாட்களாய் விசுவாசத்துடன் இருந்தார். அவர்களுக்குள் யாதொரு பேதாபேதமுங் கண்டு பிடிக்கப்பட்டதேயில்லை. ஆனால் இன்றையதினம் காலையில் அரசனும் நானும் வேட்டைக்குப்போகப் புறப்பட்டு ஒருவேலைக்காரனை மாத்திரம் அழைத்துக்கொண்டு அரண்மனையை விட்டு வெகு தூரம் போகுமுன்னமே அரசன் ஏதோ வொருகாரியமாக அரசியுடன்பேசத் தீர்மானித்து, குதிரையை கோட்டை வாயிலண்டை நிறுத்திவிட்டு, என்னை பின்னுடன்வர ஆக்கியாபித்து, அந்தப்புரத்திற்குட் சென்றார். சடுதியாய் ஓர் மனிதன் திடீலென்று எனக்கெதிரே அந்தப்புரத்திலிருந்து உடைகளின்றி வரக்கண்டேன். அவன் அரசனைப்போல் ரூபந் தரித்திருந்தபடியால் அவனை அரசனென்றே நினைத்து இப்படி நிர்வாணக் கோலமாய் அங்கம் வேர்க்க பயத்துடன் வரக்காரண மென்னவென்று கேட்டேன். அவன் நான் கேட்ட கேள்விக்கு பதிலொன்றுஞ் சொல்லாமல் அரசன் விட்டிருந்த குதிரையினிடம் தீவரமாயோடி, அதன்மேல் பாய்ந்தேறி அஸ்வத்தை வேகத்தோடு விட்டுக் கொண்டுபோகவே, அரசனுக்கு அந்தப்புறத்தில் ஏதோ சில அனர்த்தங்கள் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று நான் கருதி, அதைப் பின்னால் தெரிந்துக் கொள்ளலாமென்று

அவனைத் தொடர்ந்துகொண்டே குதிரை ஏறிச் சென்றேன். அப்போது, "ஓ மந்திரி ! நில், நில்" என்று பின்னால்வரும் சப்தத்தைக்கேட்டு நான் திரும்பிப் பார்க்கையில், நிஜமான அரசன் கோட்டையை விட்டு என் பின்னால் வருவதையும், அவர் கையில் இருக்கும் வாளில் உதிரம் ஒழுகுவதையும் நான் கண்டு திகைத்து நின்றேன். அரசன் என் சமீபம் வந்ததும் நான் மதிமருண்டிருப்பதை நோக்கி, "மந்திரீ! மாந்திரீகத்தினால் எனது நேச மனைவிபோல ரூபமெடுத்து என்னை வஞ்சித்தக்கொடிய பாதகியை நிச்சயமாய் எனது மனைவியென்று மதிமயங்கி என் நாயகியை நாட்டைவிட்டுக் காட்டிற்குத் துரத்திவிட்டேனே. எனது மனைவியைப்போல மயக்கின படுநீலியை மோசக்காரி யென்று எனது வாளுக்கு இறையாக்கிவிட்டேன். எனது ரூபம் தரித்து நானில்லாத வேளையில் நெஞ்சு துணிந்து அவளுடன் அந்தப்புறத்தில் சயனித்திருந்த துரோகியையும் கத்திக்கிறையாக்கப் போனதில் தப்பி யோடிப்போனான், அவனே உனக்குமுன் அஸ்வமேறிச் செல்கின்றவன். அவனைப் பழிக்குப்பழி வாங்காமல் விடுவதில்லை. ஆகையால் நீயும் என் பின்னே வரக்கடவாய்" என்று அதிவேகமாய்ப் போய்க் கொண்டிருக்கின்றார். நானும் அவரைப் பின் தொடர்ந்து வரும்வழியில் அகஸ்மாத்தாய் உங்களை இவ்விடம் கண்டேன்" என்றார்.

அரசகுமாரன் அரசனைப் பின்தொடர்ந்து கானகம், மலை, வனாந்திரங்களெல்லாம் கடந்துச் சென்றான். அரசனே தன்முன் சென்ற துரோகியைக்கிட்டி தமது கையிலிருந்த வாளால் அவனை வெட்டித் துணித்தனர். அவன் சாகுந்தருவாயில் தான் ஓர் மந்திரவாதியென்றும், தானே கனகபுரியில் மாறுவேஷத்துடன் அரசை பத்மாவதியினிடம் கைப்பற்றினவனென்றும், தன்மனைவியே பத்மாவதி

யை வஞ்சித்தவளென்றும் தெரிவித்து உயிர் நீங்கினன். தான் முன் எப்போதும் பார்த்திராத அரசகுமாரன் அங்கு வந்ததை அரசன் கண்டு, இவர் யாரோவென்று மயங்கி நிற்கும்போது அவ்வரசகுமாரன் அரசனைநோக்கி, "ஓ அரசனே! நான் அந்நியனாகயிருந்தும் உமக்கொரு சுபசமாச்சாரங் கொண்டுவந்தேன். உமது நேச மனைவியாகிய பத்மாவதி ஜீவித்திருக்கிறாள் என்றான். உடனே அரசன் இச்செய்தியைக் கேட்டதும் ஆனந்தமடைந்து, என்மனைவி என்னுடைய அகோர தண்டனைக்கு அதமாகாமல் இன்னும் பிழைத்திருக்கிறாளா? நீர் ஓர் அன்னியராகக் காணப்படுகிறதே உமக்கு என்னுடைய விருத்தாந்தங்கள் எப்படித் தெரியவந்தது. என் மனைவியை எங்கு கண்டீர்? என்றார். அரசகுமாரன் தான் வேட்டையாடவந்ததும், பத்மாவதியைச் சந்தித்ததும், மந்திரி மதியூகி அங்குவந்து சங்கதிகள் யாவும் தெரிவித்ததும் முதலான விருத்தாந்தங்களையுரைத்து அரசனை அழைத்துக்கொண்டு பத்மாவதியினிடம் சென்றான். அரசன் தன் மனைவியைப் பார்த்து மகிழ்ந்து, தான் ஆலோசியாமல் செய்த தீர்ப்புக்காக வருத்தப்பட்டு, மந்திரியுடனும், மனைவியுடனும் தன்னுடைந்து இனிது வாழ்ந்து, பத்மாவதியையும் கனகபுரிக்கு இராணியாக்கினர்.

ஆகையால், அம்மா! சுந்தரவல்லி! உன் விசாரத்தை விட்டொழித்து நற்காலம் வருமளவும் காத்திரு. ஆதித்தபுரியின் அரையன்மனைவி ஆனந்தவல்லி என்பாள் மாதத்திற்கொருமுறை இத்தீவுக்கு வந்து என்னைப் பணிந்து என்னுபதேசம் பெற்றுப் போவதுண்டு. அவளுக்குச் சந்ததியில்லாக்குறைவினல் வருந்திக் கொண்டிருக்கிறாள். உன்னை அவள் மகள்போல் பாவித்து தன்னகரத்திற்கு அழைத்துச்சென்று உன் நாயகர் இருக்குமிடம் தெரிந்து உன்னை

சந்துஷ்டிப் படுத்துவாள்" 'என்றார்.

சுந்தரவல்லி, யோகிகள் தனக்கு அப்போதைக் கப்போது சொல்லிக்கொண்டுவரும் நல்லுபதேசங்களினாலே ஒருவாறு தன் வியாகூலத்தை விட்டொழித்தவளாய் 20-நாட்கள்வரையிலும் அத்தீவிலேயே காலங்கழித்து வந்தாள்.

ஆதித்தபுரியின் அரசன்மனைவி ஆநந்தவல்லி வழக்கம் போல் தன் சகியுடன் இத்தீவிவை யடைந்து யோகிகள் வாசஞ்செய்யும் பர்னசாலையை யடைந்தனள். அவள் அங்கிருக்கும் சுந்தரவல்லியைக் கண்டதும் ஆச்சரியப் பட்டவளாய், " ஆ ! இதென்ன விந்தை ! இந்த நிர்மானுஷியமான தீவில் இம்மாது நல்லாள் எவ்வாறு வந்தனள் ? சகி ! இவ் வணங்கின் வடிவழகை உற்றுநோக்கில் இப்பெண்மணி யாள் நம்மைப்போல் ஒரு அரசகுலத்தில் ஜனித்தவளாகத் தோற்றுகிருள். அருந்தவர்களுக் கருள்புரியும் அந்திவண்ணன் பாகத்தமர்ந்த அன்னபூரணியோ? அலைகடலில் அரிய துயில்கொள்ளும் அச்சுதனார் அகத்திருக்கும் ஆதி லட்சுமியோ? அன்றேல் அரிய சிருட்டிசெய்யும் அயனார் நாவில்வாழ் நாமகளோ? இன்னளென்று அம்மாதை விசாரித்துத் தெரிந்துக் கொள்ளுவோம்.

**ஆனந்தவல்லி.**—அம்மா ! தாங்கள் யார்? எந்த நாடு? இந்த நிர்மானுஷியமான தீவில் தனியாய் தாங்களெவ்வாறு வந்தீர் ? தங்களுடைய வதனத்தைப் பார்க்கில் ஏதோ ஆபத்து நேர்ந்திருப்பதாகப் புலப்படுகிறது.

**சுந்தரவல்லி.**—அன்னையே !

ஆரெனவென்னை அன்புடன்கேட்ட
பூரணியேநான் புகலுவேன்கேளாய்
கனகபுரியெனும் கடிநகர்தன்னில்
வினவியசெல்வம் வேண்டுவோர்க்களித்து
அரசாளும்பூபதிக் கருந்தவப்புதல்விநான்.

யான் கனகபுரியாளும் அரசன்குமரி. என்பெயர் சுந்தர வல்லி. விதர்ப்பநாடாளும் கீர்த்திசீல மகாராஜன் குமாரரான பூபாலன் என்பவர் எனை மணந்தனர். நாங்கள் நேயம் பாராட்டி வாழுங்கால் என் மகுணரை முடிசூட்டிக்கொள்ளும்படி அவர் தந்தைகேட்க, அவர் உலகியல் பரியாது முடி சூட்டிக்கொள்ள சம்மதிப்படாமல், தபோதனர்களால் ஆகாயமார்க்கமாகச் செல்லக்கூடிய அஸ்வமொன்றைப் பெற்று, துரதிஷ்டசாலியான என்னையும், மந்திரிகுமாரரையும் உடனழைத்துக்கொண்டு ஆகாய மார்க்கமாய் அவ்வஸ்வத்தின்மேல் செல்லும்போது யான் தவறி சமுத்திரத்தில் விழுந்துவிட்டேன். ஒரு துண்டுப்பலகையின் உதவியால் இத்தீவை யடைந்தேன். இவ்விடத்திலுள்ள கருணைவள்ளலாகிய யோகிகளால் நான் என் விசனத்தினின்றும் தேற்றப்பட்டவளாய் அவருடைய ஆதரவில் ஜீவித்திருக்கிறேன். அம்மா! தாங்கள் யார்! யோகிகள் எனக்கு தெரிவித்திருந்த ஆதித்தபுரியின் பட்டமகிஷியான ஆனந்தவல்லிதானே? யான் அறியேன். எனது நாதர் எவ்வாறாயினரோ? அடியாள்மீது தாங்கள் கிருபைபுரிந்து என்னை ரக்ஷித்து எனது இன்னுயிர்க் காதலரது சுகக்ஷேமத்தை தமது ஏவலாளரால் விசாரித்து என்னை ஜீவவந்தியாகச் செய்ய வேண்டுகிறேன்.

**ஆனந்தவல்லி.**—கண்மணி! நீ கலக்க முறாதே! நானே சந்ததியற்றவளா யிருக்கிறேன். உன்னை என் பட்டணத்துக் கழைத்துக் கொண்டுபோய் என் குமாரத்தியைப் போல் பாதுகாத்து வருகின்றேன். என்னுடைய நாதரோ, மிகவும் அன்பார்ந்தவரும், நூல்களிற் செப்பியவாறு நீதிகளைப் பிரயோகிப்பதில் மிக்கத் திறமை வாய்ந்தவர். மிக சங்கடமான பெருஞ்செயல்களிலும் அஞ்சாத நெஞ்சத்தையுடையவரும், தைரியத்திற்குத் தங்கும் அகம்போன்ற

வரும், காரியங்களிலெல்லாம் மிக்க ஊக்கமுள்ளவர். ஆனதுபற்றி அவரிடம் உன் கணவருடைய விருத்தாந்தத்தைத் தெரிவித்து அவரைக் கண்டுபிடித்து உன்னிடம் ஒப்புவிக்கும்படிச் செய்கிறேன்.

சுந்தரவல்லி. தாயே! தாங்கள் இவ்வித ஆறுதல் சொன்னதினால் நான் மெத்த பாக்கியவதி யாகினேன். ஆதரவற்ற எனக்கு நின்கருணை வாய்த்ததற்கு நான் மிகுதியும் சந்தோஷமடைந்தேன்.

யோகீஸ்வரர்.—அம்மா! ஆனந்தவல்லி! நிராதரவான சுந்தரவல்லியைக் காப்பாற்றி அவளுடைய கணவனிருக்குமிடம் அறியவேண்டுவது உம்முடைய கடைமையாகும். சென்றுவாருங்கள்; உங்களுக்கு சர்வமங்கள முண்டாவதாக.

(நிட்கிரமித்தல்)

---

## அத்தியாயம் 5

### ஆழியில் விழுந்த சுபுத்தி கரைசேர்தல்

சுபுத்தி.—ஜெகதீசா! இனி நான் என்னசெய்வதும் புலப்படவில்லை. ஆழியில் தவறிவிழுந்த என் நண்பனின் நாயகியைக் காப்பதற்கு எத்தனித்து யானும் இச்சமுத்திரத்தில் குதித்ததின் பயன் ஒன்றுமில்லை. என் நேசனின் மனைவியோ கண்ணுக்குப் புலப்படவில்லை. அலைகளினால் எந்த திசையில் மோதப்பட்டனளோ? அறிகிலேன். மனைவியின் வியோகத்தால் துன்புறும் என் நேயனுக்கு தைரியம் சொல்லி காப்பாற்றவும் அருகிலிராமற் பிரிந்தேன். என்னுயிரையும் காப்பாற்றிக்கொள்ள வகை யொன்றும் புலப்படவில்லை. பேதையான சுந்தரவல்லி எப்பாடு படுகின்றனளோ? இச்சமுத்திரத்தில் இந்நேரம் ஜலத்தில் மூழ்கி உயிர் விட்டிருப்பாள். என் நண்பனும் மனைவி

யை இழந்த சோகத்தால் இச்சமுத்திரத்தில் குதித்தனனோ? அல்லது நாடடைந்தனனோ? ஒன்றுமறிய ஏதுவில்லையே! யானும் இவ்வாழியில் உயிரை நீக்க நேரிடும்போல் தோன்றுகின்றது. ஏனெனில் கண்ணுக் கெட்டியவரையில் கரை தென்படவில்லையே. எவ்வளவுகாலம் இவ்வலைகளினால் மோதுண்டு நீந்திக் கொண்டிருப்பேன்? ஆ! கைகால்களின் வலிவு ஒடுங்குகின்றன. கூடிய சீக்கிரத்தில் இவ்வாழிக்கிரையாகும் காலம் சமீபித்தது. அனாதரக்ஷகா! ஆபத்பாந்தவா! இனி என்னாலாவதொன்றுமில்லை. ஆதரிப்பது நின் கருணையே.

என்று இவ்வாறு இவன் பரதவித்துக் கொண்டிருக்கையில், மார்வார் தேசத்திலிருந்து கோவிந்ததாஸ் என்னும் ஓர் சவுக்கார் இராஜாக்கள் உடுக்கத்தக்க சால்வைகள், பீதாம்பரங்கள், தாப்தாக்கள் முதலியவைகளைக் கப்பலிலேற்றிக் கொண்டு வியாபார நிமித்தம் பலதேசங்கள் சென்று திரும்பி, ஆழியில் நீந்திக்கொண்டிருக்கும் சுபுத்தியின் சமீபமாய்க் கப்பலைச்செலுத்தி, தன் வேலையாட்களைக்கொண்டு சுபுத்தியைத் தூக்கிக் கப்பலில் சேர்த்தான். சுபுத்தி கப்பலில் சேர்ந்ததும் பிராணனை இழக்குந்தருவாயில் தான் காப்பாற்றப் பட்டதற்கு சர்வவல்லமையுள்ள கருணைக் கடலான சர்வேஸ்வரனைத் தியானித்துப் பின் அக்கப்பலதிகாரியான கோவிந்ததாஸின் பாதங்களில் வணங்கி தன்னை ஆழியில் ஆழாவண்ணம் ஆண்டருளியதற்காக ஸ்தோத்திரஞ்செய்து தான் ஓர் தனவானுடைய புதல்வனென்றும், தானும் வியாபார நிமித்தம் கப்பலில் செல்லும்போது துரதிஷ்டவசத்தால் கப்பலானது திசை தப்பி ஓர் கற்பாறையில் மோதுண்டு அதிலுள்ள சாமான்களுமனேக ஏவலாளர்களுடனும் நீரில் அழுந்தியதால் தன் ஆஸ்திமுழுவதும் நாசமாயிற்றென்றும், தான் மாத்திரம்

பரமேஸ்வரனுடைய அருளால் ஜலத்தில் உடனே முழுகிப் போகாமல் நீந்திக் கொண்டிருந்ததாகவும், இனி தான ஜீவிப்பதற்கு திரவியம் கிடையாதென்றும், ஜீவகால பரியந்தம் தன்னைக் காப்பாற்ற வேண்டுமென்றும் சொன்ஞன்.

கோவிந்ததாஸ்.—குழந்தாய்! நீ இனி பயத்தைவிட்டொழி. நீ கோறியவண்ணம் நான் உன்னை ஆதரித்து வருகிறேன். என் வியாபாரத்தொழிலில் நீயும் ஒத்தாசையாகவிருந்து நடத்தவேண்டும். நீ செல்வந்தனுக விருந்தும் லட்சுமியினுடைய கடாட்சம் உடனே உன்னைவிட்டு நீங்கிற்றல்லவா?

சுபுத்தி.—ஐயா! லட்சுமி பாற்கடலி லிருந்து உதிக்கையில் இளம்பிறையான மெல்லிய இந்துவினிடமிருந்து தனிமையாக வக்கிரத் தன்மையையும் உச்சைச்வரஸ்வினிடமிருந்து நின்றவிடத்தில் நில்லாத நிலையற்ற நிலைமையையும், காலகூடத்தினிடமிருந்து மோகத்தை யுண்டாக்கும் மஹிமையையும், மதுவினிடமிருந்து மதத்தையும், கௌஸ்துவ மணியினிடமிருந்து கடினத் தன்மையையும், அவற்றுடன் சேர்ந்திருந்த பரிசயப்பற்றிஞல் பிரிந்திருக்கையில் மனதை ஆற்றுதற்பொருட்டு இவ்வித சின்னங்களை யெல்லாம் பெற்றுவந்திருக்கிருள். மிகவும் இழிகுணமுள்ள இவ்விலட்சுமியைப்போல் இவ்வாறு பரிசயத்திற் குரித்தாகாதவர் வேருருவரும் இவ்வுலகில் திடமான நற்குணங்களாகும் பாசங்களால் இறுகக்கட்டி இடம்விட்டுப் பெயர முடியாமற் செய்தபோதிலும், இருந்தவிடம் தெரியாது மறைந்துவிடுகின்ருள். இவள் பரிசயத்தைப் பரிபாலிக்கின்ருளில்லை. உயர்ந்த ஜாதியை உற்றுப் பார்க்கின்றதில்லை, ஒழுக்கத்தை யுணர்வதில்லை, சந்ததியின் வரிசையை சற்றும் பின்பற்றுவதில்லை, தர்மத்தைத் தழுவுவதில்லை.

கொடையைக் கொண்டாடுவதில்லை. அறிவின் அருமையை விசாரிப்பதில்லை. சாஸ்திரத்தைச் செவியுறுகின்றதில்லை. தர்மத்தைத் தழுவுவதில்லை. வானத்தின்கண் முகில்கள் அசைகையில் அவைகளிற்றோன்றும் விதம்விதமான விசித்திர வடிவங்களின் வரிகள்போல் பார்த்துக்கொண் டிருக்கையிலேயே பாழாக்கி விடுகின்றனள். அந்த மந்தர பர்வதத்தைப் பாற்கடலிற் சுழற்றுகையில் அதனிட மிருந்து பயிற்சி பெற்றவள்போல் இன்றைக்கும் இவள் அங்குமிங்குமாய் சுழன்றோடுகிறாள். தீட்சணத் தன்மையைக் கற்றுக்கொள்பவள்போல் கத்திகளின் கூர்மையான முனைகளிற் குடியிருக்கிறாள். பாதாள கெவியில் பேரிருளைப் பரப்புகின்றாள். மாரிகாலத்து மின்னல்போல் ஒளித்து மறைகின்றனள். பலங் குன்றியவனைப் பித்தனுக்குகின்றாள். சரஸ்வதியின் அனுக்கிரஹம்பெற்ற ஜனத்தை அசூயையால் தழுவுகின்றாளில்லை. நற்குணம் பொருந்தியவனை தூய்மையற்றவனென் றெண்ணியவள்போல் பரிசிப்பது மில்லை. உதாரத் தன்மையனை அமங்கலனைப்போல் அவமதிக்கின்றாள். சத்புருடனை அவசகுனம்போ லெண்ணிக் கண்ணெடுத்துப் பார்ப்பதுமில்லை. நற்குலத்தவனை நல்லபாம் பென்று எண்ணியவள்போய் தாண்டி விடுகின்றனள். சூரனைக் கண்டகம்போ லெண்ணிப் பரிஹரித்து விடுகின்றாள். கொடையாளியைக் கெட்ட கனவைப்போல் நினைப்பது மில்லை. வினய முள்ளவனைப் பாதகனைப்போ லெண்ணி அவன் பக்கத்திலும் அணுகாள். தீரத்தன்மையனைப் பித்துப்பிடித்தவனைப்போல் பரிஹசிக்கின்றனள். மிக்க நிலையில்லாதத் தன்மையுள்ள இவ்விலட்சுமியானவள் தீபத்தின் சுடரொளிபோல் எவ்வளவுக் கெவ்வளவு ஒடுங்கிப் பிரகாசிக்கின்றனளோ, அவ்வளவுக் கவ்வளவு தூமம்போல் மலினமான தீராத தீவினைகளையே தருகின்றனள். இவள்

பேரவா என்னும் விஷச்செடியை வளர்ப்பதற்குத் தண்ணீர். ஐம்புலன்களாகும் அடவி மிருகங்களை மயக்கச் செய்யும் மறவர்களின் பாட்டு. சச்சரிதமென்னும் சித்திரங்களைச் சீர்குலையச்செய்யும் தூமக்கொடி. மோகமாகும் நீண்ட நித்திரைக்கு மாயப்படுக்கை. பாவங்களென்னும் பெரும் பாம்புகளுக்குப் படுக்கும் பாழி. நற்குணங்களாகும் அன்னப் பறவைகளுக்கு அகாலத்திலுதித்த மாரிகாலம். கபடநாடகத்திற்குப் பிரஸ்தாவனை. தர்மமென்னும் இந்துமண்டலத்திற்கு இராகுவின் நாக்கு. பழக்கத்தைப் பாராட்டாதவளான இவளால் திடமாகத் தழுவப்பெற்று வஞ்சிக்கப்படாமலிருந்த அத்தகைய ஒருவரையும் நான் கண்டதில்லை. நிச்சயமாய் சித்திரத்தி லிருந்தாலும் இவள் சலிக்கின்றனள். செவியுற்றபோதிலும் ஏமாற்றிவிடுகிறாள். சித்தத்திற் சிந்தித்தாலும் மோசம் செய்கின்றனள். இங்ஙனம் நல்லொழுக்கமற்றவளான இவ்விலட்சுமியை விட்டு நான் பிரிந்திருப்பதே நல்லதாக எனக்குப் புலப்படுகிறது. ஆகையால் தாங்கள் அதைப்பற்றி கவலைப்படாதிருக்க உம்மை வேண்டுகிறேன்.

கோவிந்ததாஸ்.—(தனக்குள்) இவன் நற்குலத்தில் பிறந்தவனாகவும், மரியாதை முதலிய ஒழுக்கங்கள் தெரிந்தவனாகவும், கல்வியில் மிக்க தேர்ச்சி யடைந்தவனாகவும் காணப்படுகிறான். இவனை நாம்போஷித்து வருவோமாயின் நம்முடைய வியாபாரத் தொழிலுக்குத் தகுந்த உதவி புரிவதுடன் நமக்கு வியாபாரமும் அதிகரித்துவரும். (பஹிரங்கமாய்) அப்பா! சுபுத்தி! நாம் இப்போது மார்வார் தேசத்திற்குச் செல்வோம். பிறகு, சிலநாள் கழித்து நாம் வியாபார நிமித்தம் வெளியில் செல்லவேண்டும். இதற்குள்ளாக என்வர்த்தகத் தொழிலில் நீ கவனத்தைச் செலுத்தி அத்தொழிலைக் கற்றுக்கொள்ளவேண்டும்.

## அத்தியாயம் 6

### பூபாலன் மாவிந்தபுரத்தை யடைதல்.

பூபாலன்.—ஆ பிராணசகி! என் பிரியநண்பா! நீங்கள் இருவரும் சமுத்திரத்தில் விழுந்ததற்குப் பாவியாகிய நானே காரண னாயினேன். இதுவரையில் உயிர் துறந்தீர்களோ? அல்லது கடவுளுடைய கிருபையால் இரட்சிக்கப் பட்டீர்களோ? ஏ ஜெகதீசா! எனக்கோ மிகவும் தாகமாயிருக்கின்றது. பசியோ என்னைப் பீடிக்கின்றது. ஓ! இதோ கடற்கரை தென்படுகின்றது. ஆகையால் அஸ்வத்தினின்றும் இங்கு இறங்கி பசிப்பிணியை நிவர்த்தி செய்துக் கொண்டு பிறகு மேல் நடக்கவேண்டியதை யோசிப்போம். அதோ சற்று தூரத்தில் செழிப்பான விருக்ஷங்கள் காணப் படுகிறது. அங்கு நல்ல ஜலம் கிடைக்கும். ஆகையால் அங்குச்செல்வேன். ஆ ஹா! இத்தடாகம் என்ன அழகாக அமைக்கப்பட்டிருக்கிறது. இக்குளத்து நீரைப் படைத்து விட்டுப் பிரமதேவன், மீண்டும் அமுதத்தை ஏன் உண்டாக்கினார்? அவர் ஏற்கனவே செய்த ஸ்ருஷ்டியை மறுபடியும் வீணாகச்செய்தவரானார். இந்நீரும் அமுதம்போல் புலன்கள் ஐந்தையும் ஆனந்தப்படுத்துகிறது. மிகவும் நிர்மலமாயிருப்பதால் இக்குளம் கண்களைக் களிக்கச் செய்கின்றது. குளிர்ந்திருக்கின்ற தாகையால் பரிச சுகத்தை யளிக்கின்றது. தாமரை மலர்களின் வாசனை பொருந்தியதால், நாசியைத் திருப்தி செய்கின்றது. அன்னப்பறவைகள் ஆர்ப்பரிப்பதால், செவியை ஆனந்தப்படுத்துகின்றது, நல்ல சுவையை பொருந்தியதானதால் நாவை சந்தோஷிக்கச்செய்கின்றது. என்ன ஆச்சரியம்! அமுதம்போல் நல்ல சுவையுள்ள இந்த ஜலத்தை விட்டு விட்டு, உப்புடன்கூடி பானம் முதலியதற்குச் சற்றும் பயன்படாத சாகரத்தில்

படுத்துறங்கும் மகாவிஷ்ணு, ஜலசயனத்திலுண்டான தனது ஆவலைத் தகுந்தவாறு செலுத்திக்கொண்டாரில்லை. உண்மையாக இப்பொய்கையானது ஆதியில் உண்டாக்கப் பட்டதல்ல; ஏனெனில் பிரளயகாலத்து மஹா வராஹனது மூக்கினால் தாக்கப்படுவதிலிருந்து பயந்த பூதேவியான வள், சிறு கும்பத்திலுதித்த முனிவரால் அருந்தப்பெற்ற நீரணைத்தையுமுடைய கடலிலல்லவோ மறைந்துக்கொள்ள இறங்கினள். அகாதமான அனேக பாதாளங்கள்போல் மிகவும் ஆழமான ஜலத்தையுடைய இம்மஹா சரஸ்வில் இருந்திருப்பாளாகில், ஒருவரேயல்ல, ஆயிரம் மஹா வராஹராலும் அடையக்கூடாதவளாய் விட்டிருப்பள். பிரளயகாலத்துப் பெரும் முகில்கள் இதிலிருந்தே சொற்ப நீர்களை யெடுத்தெடுத்து பிரளயகாலத்தில் பூமியெங்கும் பொழிந்து அவைகளை நாசமாக்குகின்றன வென்பது உண்மை. பூர்வத்தில் பிரம்ம ஸ்ருஷ்டிக்கு முன்பு ஜல மயமாயிருந்த பிரம்மாண்டரூபமான இப்புவனமானது ஒருமிக்கத் திரண்டு இவ்வாறு தடாகமென்னும் பெயர் பெற்று தோன்றியிருக்கின்றதென யான் நினைக்கின்றேன். இந்த நீரையருந்தி சற்று என்களையைத் தீர்த்துக்கொள்ளு கிறேன்.

தனஞ்செயன்:—(மாவிந்தநகரத்து ஒரு தனவந்த னுடைய குமாரன்).—யான் மிகுந்த ஐஸ்வர்யத்திற் கதிபதி யாகியிருந்தும் இச்செல்வத்தை எவ்வாறு உபயோகப் படுத்தவேண்டுமென்பதை உணர்த்த எனக்கோர் சன் மார்க்க நண்பன் கிடைக்கவில்லை. சிலர் செல்வத்தைப் பெற்ற இருமாப்பினால் தமது பிறப்பையும் மறந்தவர்க ளாய் விதம் விதமான விஷயங்களை யனுபவிப்பதில் வீணாசைக் கொண்டவர்களாகவும்; சிலர், இயல்பாகவே சபலத்தன்மையதானதால் எங்கும் அலைந்து திரிவதும்,

ஒன்றாகவிருப்பினும் இலக்ஷக்கணக்கானதுபோல் தோற்று வதுமான மனத்தினால் அலைக்கப் பெற்றவர்களாகவும் குழப்பத்தை யடைகின்றனர்; சிலர் செல்வச்சூட்டினால் சமைக்கப்பெற்றவர்போல் துள்ளித் துடிக்கின்றனர்; சிலர் செல்வச்செருக்கினால் வலுவான அடியினால் தாக்கப்பட்ட வர்போல் தங்கள் அங்கங்களைத் தாங்களே தாங்கிக்கொள்ள மாட்டாமல் நண்டுகளைப்போல் ஒரு பக்கமாய் சாய்ந்து நடக்கின்றனர்; சிலர் அறநெறித்தவறியதால் நடமாட்டத் திற் றடுமாற்றமடைந்து மூடவர்போல் பிறருதவியினாற் றானே சஞ்சரிக்கின்றனர்; சிலர் பொய் பேசுவதால் வாயிற் பொங்கி யெழும்பிய புண்களையுடையவர்போல் பெரும் பிரயாசத்துடன் பிதற்றுகின்றனர். மரிக்குங்காலம் மிக நெருங்கியதோவெனத் தோன்றும்படி உறவினரையும் உணர்கிறாரில்லை; சிலர் கண்ணோய் பெற்றவர்போல் களங்க மற்றிருக்கும் பெரியோரைப் பார்க்கின்றனரில்லை; சிலர் பேராசையென்னும் நஞ்சினால் மூர்ச்சையடைந்தவர்களாய் பிரபஞ்சத்திலுள்ள பொருள்கள் யாவற்றையும் கனகமய மாகப் பார்க்கின்றனர்; அன்னோருடையப் பெயர் செவி யுறப்படினும், சாவுப்பறைகள்போல் வெகுட்டலை யுண் டாக்குகின்றது; இவர்கள் தினந்தோறும் பாவங்களால் நிறப்பப்பெற்றவர்போல் உடல்பூரித்தவராகின்றனர்; இத் தகைய நிலைமையிலிருக்கும் மனிதர்கள் புற்றுப்புற்களின் முனையிலிருக்கும் பனித்துளிகளைப்போல் தாம் வீழ்ந்து போவதையும் கண்திறந்து பார்க்கின்றனரில்லை; சிலர் சூதாட்டத்தைப் பொழுது போக்கென்றும், வேட்டை யாடி மிருகம் முதலான ஜந்துக்களைக்கொல்வதை சரீர உழைப்பென்றும், மதுபானத்தை மனமகிழ்ச்சியென்றும், பெரியோருடைய வார்த்தைகளைப் புறக்கணித்தல் பரா தீனமற்ற தன்மையென்றும், பரிபவங்களைச் சகிக்குந் தன்

மையைப் பொறுமையெனவும், சுதந்தரம் பாராட்டியிருத்தலைப் பிரபுத்தன்மை யெனவும், கடவுளை அவமதித்தல் மிகுந்த மனோதைரியமெனவும் எண்ணி இருக்கின்றனர். சிலர் தமக்குள் கடவுளும் தங்கியிருப்பதாக தாம் ஆரோகணம் செய்துகொண்டு தமது புயங்களிரண்டிலும் வேறு இரண்டு கரங்கள் மறைந்திருக்கின்றன வென்றும் மனதில் தியானம் செய்கின்றனர்; தமது நெற்றியிலும் மூன்றாவது கண்மறைக்கப்பெற்று இருப்பதாகவும் மதிக்கின்றனர்; கள்ள மகிமையாலுண்டான கர்வம் நிரம்பியவர்களாய் தைவங்களைத் தொழுகின்றாரில்லை, அந்தணரை ஆராதிப்பதில்லை, மேன்மக்களை சம்மானிப்பதில்லை, குருமார்களுக்கு மரியாதை செய்கின்றாரில்லை, பண்டிதரைப் பரிஹஸிக்கின்றனர், விருத்தர்களின் உபதேசத்தை உணர்கின்றாரில்லை, உசித முறைப்போரை வெறுக்கின்றனர்; வேறுதொழில் ஒன்றுமில்லாது அல்லும் பகலும் அஞ்சலிசெய்துக் கொண்டு யாவனொருவன் போற்றுகிறானோ, எவனொருவன் எப்பொழுதும் மாய மஹாத்மியத்தை யுண்டாக்குகின்றானோ, எவ்வகையிலும் அன்னவனையே சந்தோஷத்துடன் ஆமோதிக்கின்றனர். அவனுடனே சல்லாபம் செய்கின்றனர், அவனையே சதா அருகிலிருக்கச் செய்கின்றனர், அவன் வார்த்தைகளையே செவியுறுகின்றனர், அவனுக்குத் தான் செல்வத்தைச் சொரிகின்றனர்.

இவ்வாறு மிகவும் முரண்பட்ட கோடிக்கணக்கான கொடிய செயல்களை யுடையவர்களுடைய பிறவி மிகவும் கோரமானது! ஆஹா!! இதென்ன விந்தையாயிருக்கிறது. நான் வழக்கம்போல் இச்சரசுனிடம் நீராடவந்தவிடத்தில் கரையின்மேல் ஓர் வாலிபப்புருடன் களைத்து நித்திரைசெய்கின்றான். இவன் மகா புருடலட்சணம் முழுதும் தன்னிட மமைக்கப்பெற்றிருக்கிறான். குன்றென

உயர்ந்து எழுத்துணைத்திரண்டு பணைத்து முழந்தாள் தடவும் தடங்கையன். காதளவும் நீண்டு செவ்வரிபரந்து விசாலமாய்க் கருணையொழுகும் கஞ்சமலரன்ன கண்களை யுடையவன். மதிபோன்ற முகத்தினன். புன்னகைபொலி யும் வாயினன். நல்ல உயர்குலத்தில் பிறந்த உத்தமன் போல் காணப்படுகிறான். நான் நெடுநாளாக வேண்டு மெனத் தேடியிருந்த நண்பன் எனக்குக் கிடைத்தனன் போலும். இவனுடைய களையை யகற்றிப் பின் அவனுடைய விருத்தாந்தத்தைத் தெரிந்துகொள்வேன்.

(மூர்ச்சையைத் தெளிவித்தல்.)

பூபாலன்:—(தனக்குள்) ஹா! எனது மூர்ச்சையைத் தெளிவித்தவன் ஓர் நற்குடியிற் பிறந்தவனுகக் காணப்படு கிறான். ஆயினும் என்னுடைய விருத்தாந்தத்தை மறைத்து வேறுவிதமாகச்சொல்லி இவனுடன் சிநேகம் பாராட்டி என்னுடைய காரியங்களைச் சரிப்படுத்திக்கொள்ளுவேன்.

தனஞ்சேயன்.—நண்பா! தாம் யார்? தாம் இக்குளக் கரையில் மூர்ச்சித்திருக்க நேரிட்ட காரணம் யாது? தயை செய்து தெரிவிக்கவேண்டுகிறேன்.

பூபாலன்.—அண்ணலே! யான் மந்தரதேயத்தை யாளும் அரையன் மதலை, என்பெயர் தருமநந்தன். யான் என் தந்தையினுல் யுவராஜபட்டாபிஷேகம்பெற்ற காலையில் பல்லாயிரக் கணக்கானதும், அதிபயங்கரமானதும், உற் பாதவேளையில் உதித்தவேதாளக்கூட்டம் போன்றதுமான வேடர்களுடைய படையொன்று என் நாட்டை எதிர்த் தது. அது அங்குமிங்குமாய் அலைந்து திரியும் எமனுடைய பரிவாரம் போலவும் ஓரிடத்தில் கூடிய தீவினைத்திரள் போலவும், பாணங்களைக் கோடைமழைபோல் சொரிந்து இராமசந்திரனுல் இயமனுக்கு இறையாக்கப்பட்ட கரதூஷ ணர்களது சேனைகளின் சமூகமானது இராமச்சந்திரன்

பால் தீங்கெண்ணிய தோஷத்தால் பிறந்து வந்ததுபோல வும் நாட்டில் பிரவேசித்து, என் தாய் தந்தைகளை வதைத்து, குடிகளெல்லோரையும் தும்சப்படுத்தி, என்னையும் சிறைப் படுத்தினார்கள். நான் அவர்களுடைய காவலில் சிறிது காலம் இருந்தேன். அவர்களுடைய ஆஹாரமோ சத் புருடர்களால் நிந்திக்கப்பெற்ற மதுமாம்சம் முதலியன, நரிகள் ஊளையிடுவதே அவர்களுடைய சாஸ்திரம், நன்மை தீமைகளை உபதேசிப்பவைகள் ஆந்தைகள், நாய்களே அவர்களுக்கு பரிசயத்திற்குரியவை, கொடுந்தொழில் புரிய சாதனங்களான வில்லம்புகளே அவர்களுக்குத் தோழர், குரூரத்தன்மையுடைய வேங்கைகளுடன் அவர்களுக்குச் சகவாசம், பசுக்களின் உதிரத்தினால் அவர்களுடைய தேவ தார்ச்சனை, களவாடுதலே அவர்களுடைய ஜீவனம், சர்ப் பங்களின் சிரசிலிருக்கும் மாணிக்கங்களே அவர்களுடைய பூண்கள், காட்டானைகளின் மதநீர்களே அவர்களுக்குச் சந்தனப்பூச்சு, இப்படிப்பட்டவர்களுடைய சிறையில் அநேகநாள் கஷ்டப்பட்டிருந்து ஓர்நாள் கடவுளினுடைய கிருபையால் யாருக்கும் தெரியாமல் தப்பித்துக்கொண்டு சமுத்திரதீரம் சேர்ந்து கப்பலேறிச் செல்கையில் கப்ப லுடைந்து ஆழியிலாழ்ந்தது. ஒரு துண்டுப்பலகையினுதவி யால் இத்தீவையடைந்து நெடுநாள் வருந்தினவனாகைய்யால் இக்குளத்தின் ஜலத்தை யருந்தினதும் மெய்மறந்து விழுந்துவிட்டேன். பிறகு உம்முடைய மடியிலிருக்கக் கண்டேன். இதுதான் என்னுடைய வரலாறு.

தனஞ்சேயன்.—இராஜகுலத்தில் தோன்றிய உத்தம நண்பா! நீர் யாதொன்றுக்கும் அஞ்சவேண்டிய அவசிய மில்லை. நீர் தெரிவித்த கொடிய கிராதகர்களிடமிருந்து நீர் தப்பிவந்தது கடவுளின் கிருபையே யொழிய வேறொன்றுமல்ல. யானோ இம்மாவிந்த நகரத்து ஒரு

தனவந்தனுடைய ஏகபுத்திரன். எனக்கோ அளவுகடந்த செல்வமிருக்கின்றது. தங்களுக்கிஷ்டமானபடி தாங்கள் செலவிடலாம். இனி என்மனைக் கேகலாம் வாருங்கள்.

(இருவரும் நிஷ்க்ரமித்தல்.)

---

## அத்தியாயம் 7

### பூபாலன் புவனசுந்தரியின் அரண்மனைக்கேகுதல்.

பூபாலன்.—(தனக்கு) ஆ ஹா! இம்மாவிந்தநகரம் எவ்வளவு அழகாகக் காணப்படுகிறது. பாதாளமட்டும் ஆழமுள்ள தண்ணீர் நிரம்பியதுமான அகழியினால் சூழப் பெற்றிருக்கின்றது. ஆகாயத்தை யளாவிய கொடிமுடிக ளுடன் கூடியதும், சுண்ணப்பூச்சினால் வெளுத்ததுமான மதிலானது கைலையங்கிரிக்குச் சமானமாகவிருக்கிறது. சங்குகள், முத்துச்சிப்பிகள், முத்துகள், பவழங்கள், மரக தக்கற்கள், இன்னும் பற்பல இரத்தினங்களின் குவியல்க ளுடன் கூடியவைகளும், தங்கத்துகள்களாகும் மணல் களின் இராசிகள் பரப்பப்பெற்றவையுமான வெகு நீண்ட பெருங்கடை வீதிகள் விளங்குகின்றன. (தனஞ்செய னுடைய வீட்டையடைந்ததும், பஹிரங்கமாய்) மித்திரா! இந்நகரத்தின் சவிஸ்தாரத்தை எனக்கு விவரமாய்த் தெரி விக்க விரும்புகிறேன்.

தனஞ்செயன்.— நண்பா! இந்நகரத்தின் பெயர் மாவிந்தநகரமென்று முன்னமேயே தெரிவித்திருக்கிறேன். இந்நாட்டையாளும் அரசனுக்கு ஜெயசீலன் என்றுபெயர். அவ்வரசனுடைய ஜேஷ்ட மனைவியானவள் ஒருபெண்ணைப் பெற்று இறந்தனள். அப்பெண் தாதிமார்களால் வளர்க்க வளர்ந்து பருவமடைந்தனள். அப்பெண்ணின் பெயர்: புவனசுந்தரி. அவளுக்கு மணம் செய்விக்கப்பிதா கருதிய

தற்கு, புவனசுந்தரி தான் விரும்பும் நாயகனையே காதல னுகச் செய்யவேண்டுமென, இதனைக் கேள்வியுற்ற அரச னுடைய இளைய மனைவியான ரூபாவதி அதிக கோப மடைந்து தன் கணவனை நோக்கி, "நாதா! சகல அரசர் களும் தங்களுக்குக்கப்பம் செலுத்தி தங்களுடைய வார்த் தைக்கு எதிர்பேசுவாரில்லாமல் அஞ்சிநிற்க, கேவலம் சிறிய வயதையுடைய ஓர் பெண் சற்றுகிலும் அச்ச மின்றி தங்களுடைய வார்த்தைக்கு எதிர்மொழி பகன்ற ளல்லவா? தான் இச்சிக்கும் நாயகனையே தான் வரிப்ப தாகச்சொன்னுளன்றே! அன்னவளை என்ன செய்தால்தா னென்ன? இவளைத் தகுந்த காவலுடன் புருடர்கள் நெருங் கக்கூடாத விடத்தில் சிறைப்படுத்துவோமாயின், இவள் நம்முடைய மனமொப்ப நடப்பாளெனமொழிய, அரச னும் அதற்குச் சம்மதிக்க, ரூபாவதி அதிக திரவியத்தைச் செலவிட்டு ஆழிமத்தியில் ஓர் அரண்மனைப் புதுக்கி, அதற் கும் அரசமாளிகைக்கும் நிலவறையுண்டாக்கி, அதில் புவனசுந்தரியை அதிக வீரத்தன்மை பொருந்திய காவற் காரர்களை வைத்து அருஞ்சிறை வைத்திருக்கின்றனள். அந்த புவனசுந்தரியின் அழகை என்னென்றுரைப்பேன். மதியைப்பழித்த வதனமும், தனுசைப்பழித்த புருவமும், வேலைப்பழித்த கண்களும், கண்ணுடியைத் தோர்க்கடிக் கும் கபோலமும், மூன்றும்பிறைச் சந்திரனைப்போன்ற நெற்றியும், முல்லையரும்பைப் பழித்த தந்த வரிசையும், குயிலைப்பழித்தக்குறலும், சங்கை நிகர்த்தக்கழுத்தும், வேயைநிகர்த்த கைகளும், தாமரையைப்பழித்த கரங்க ளும், ஸ்வர்னகலசத்தை யொத்த ஸ்தனபாரங்களும், வாழைஸ்ப நிகர்த்த தொடைகளும், நண்டைப்பழித்த முழங்காலும், அன்னத்தைப்பழித்த நடையும், வண்டைப் பழித்த கூந்தலும், மின்னலைப்பழித்த சாயலும் உடைய

வள். இவ்வித அழகினையுடைய அப்பெண்மணியை ஆழி மத்திய கிரகத்தில் சிறைப்படுத்தி இருப்பதுதான் ஒரு ஆச்சரியம்.

பூபாலன்.—நேசா! நீ சொன்னதைக் கேட்டவுடன் என் சரீரம் பரவசமாகின்றது. அவ்வித அழகு படைத்த அணங்கை எவ்விதத்திலாகிலும் பார்க்கவேண்டும்.

தனஞ்செயன்.—நண்பா! நன்குமொழிந்தனை. அவ்வணங்கை அவ்வளவு சுலபமாகப் பார்க்கக்கூடிய இடத்தில் வைக்கப்பட்டில்லையென்று நான் முன்னதாகவே தெரிவித்திருக்கின்றேன். அப்படி சுலபயாகப் பார்க்கக் கூடிய இடமாக விருக்குமாயின் இதுவரையில் எந்த அரசகுமாரனுகிலும் அங்குச்சென்று அவளை மணந்திருப்பானல்லவா? அத்துடன் அவள் அரசகுமாரர்கள் விரும்பக் கூடிய அவ்வளவு சுந்தரவதியல்ல. நான் உம்முடைய மனதை சோதிப்பதற்காகவே அவ்வாறு வர்ணித்துச் சொன்னேன்.

பூபாலன்.—நண்பா! நீ சொல்லும் சமாதானத்தை நான் கிரக்ககூடவில்லை. நீ முதலில் அவ்வணங்கைப்பற்றி வர்ணித்ததுமுதல் எனது அங்கங்கள் அவிந்துபோகின்றன போலவும், இருதயம் கொதிப்பிக்கப்படுவது போலவும், திருஷ்டி தஹிக்கப்படுவது போலவும், சரீரம் எரிகின்றது போலவும் நான் உணருகின்றேன். உலகத்தில் உனக்கீடான வேறு உறவினரும் என்றனுக்கு உளரோ? என் செய்வேன்? நான் என்னைக் கட்டுப்படுத்த மாட்டாதவனுயிருக்கிறேன்?

தனஞ்செயன்.—மித்திரா! என்ன விபரீதமாக முடிந்தது. கருங்குவளை மலர்களாலாக்கிய மாலையென்றெண்ணி வாளை எவனுகிலும் ஆலிங்கனஞ் செய்வானே? காரகிற் கட்டையின் தூமக்கொடியென்று எவனுகிலும் கிருஷ்ண

சர்ப்பத்தைக் கட்டிக்கொள்வானு? மாணிக்க மென்றெண்ணி நன்குமினுக்கும் கனலை எவனுகிலும் பரிசிப்பானு? எனதன்பார்ந்த சிநேகிதா! இஃது உனக்குற்றதல்ல. அற்பஜனங்கள்போய் பழகும்பாதை நீ செல்லத் துணிவது, எவனே சாமானியனைப்போல் நீயும் என்ன இக்குழப்பத்திலிருந்து உன்னை விலக்கிக்கொள்ள மாட்டவில்லையே?

பூபாலன்.—(தனக்குள்) இவனே நம்மை அக்கன்னிகையிருக்கும் இடத்திற்குச் செல்லவிட மாட்டான் போலிருக்கிறது அல்லது இவன் வார்த்தைக்குமீறி நாம் செல்வதாயிருந்தாலும் நம்மைத் தொடர்ந்தே வருவான் போல் தோன்றுகிறது. அப்படி இவன் வந்தால் ஆகாய மார்க்கமாய்ச் செல்லக்கூடிய நம்முடைய அஸ்வத்தின் இரகசியம் தெரிந்துவிடும். தெரிந்தால் நாம் இவனுக்குச் சொல்லியிருக்கும் விருத்தாந்தம் பொய்யாகிவிடும். பின் நம்முடைய காரியங்கள் ஒன்றும் கைகூடாது. ஆகையால் நாம் இவனுடைய வார்த்தைக்கு உள்பட்டவனுக நடித்து இவனுக்குத் தெரியாமலே நாம் அக்கன்னியிருக்கும் இடம் செல்லவேண்டும். (பஹிரங்கமாய்) நண்பா! உன் வார்த்தையை யான் கேளாவிடிற் றருமமன்று. நீ இரண்டாவதாகச்சொன்ன வார்த்தைகளே நிசமென்று தெரிந்துக் கொண்டேன். தோழா! நேரமாயிற்று, நாம் போஜனம் செய்து சயனித்துக்கொள்ளுவோம்.

(நிட்கிரமித்தல்.)

பூபாலன்.—(தனக்குள்) நண்பன் தனஞ்செயன் நித்திரையிலிருக்கிறுன். புவனசுந்தரியின் சரித்திரம் கேழ்விப்பட்டதுமுதல் எனக்கோ ஒன்றின்மேலேயும் நாட்டம் செல்லவில்லை. ஆகையால் நான் சமுத்திரக்கரைசென்று, அங்கிருக்கும் என்னுடைய அஸ்வத்தின்மேலேறி ஆழி

மத்தியிலுள்ள கிருகத்தையடைந்து அப்பெண்மணியைக் கண்டு வருவேன்.

(நிட்கிரமித்தல்.)

பூபாலன்.—ஆ ஹா! என்ன இவ்வரண்மனையின் விநோதம். இங்குகாவற்காரர்கள் அதிக ஜாக்கிரதையுடன் காவல் புரிகின்றாராகிலும், நான் வந்தவேளை நல்லதாயிருப்பதினால் அவர்கள் அயர்ந்து நித்திரைச் செய்கின்றனர். இம்மண்டபத்தின் மத்தியபாகத்தில் மிகவும் ஒளிவீசும் ஆபரணங்களை யணிந்துக்கொண்டு நீலநிறமான மேல்விரிப்பால் மறைக்கப்பெற்றதும், அதிக பெரிதல்லாத கட்டிலில், வெண்ணிறத்தலையணையிற் சார்ந்து நித்திரை செய்யும் இப்பெண்மணிதானோ புவனசுந்தரி? என்னே அதிசயம்! கீழே மணிமயமான தரையின்கண் இவளது பிரதிபிம்பம் தோன்றியிருப்பதால் நாகங்களால் பாதாள லோகத்திற்கு அபகரித்துக்கொண்டு போகப்படுபவள் போலவும், பக்கங்களில் நாற்புறமுமிருக்கும் இரத்தினச் சுவர்களில் இவளது பிரதிபிம்பம் தோன்றியிருப்பதால் திக்பாலகரால் எடுத்தேகப்படுபவள் போலவும், மேலே மணிமண்டபங்களுள் இவளது பிரதிபிம்பம் தோன்றியிருப்பதால் தேவர்களால் தூக்கிக்கொண்டு போகப்படுபவள் போலவும் காணப்படுகிறது. என்ன இவளது சுந்தரம்! இவள் அண்டர்பூபதி வனிதையோ? தங்கத்தைப் பங்கம்செய்த மேனியையுடையவளாயிருக்கிறாள். இவளுடைய உதடுகளைப் பார்த்தால் புதிய வாலிபப்பருவமென்னும் வாயுவினால் அலைக்கப்பெற்ற காதலாகும் கடலிற் கிளம்பிய இரண்டு அலைகளுக்கொப்பான பவளக்கொடிபோல் சிவந்திருக்கின்றன. மிக்க மதங்கொண்ட யௌவனமாகும் யானையின் மதநீர்ப்பிரவாகம்போன்ற இரண்டு புருவங்களாலும், முகத்திற் பற்றியிருக்கும் மனச்சிலைச் சாந்துகொண்டு இடப்பட்ட திலகத்

தினும் இவளது நெற்றிக்கட்டுத் துலங்குகின்றது. இவளுடைய நித்திரையை நான் இப்போது பங்கம்செய்தால், ஒருக்கால் என்மீது விருப்பமில்லாவிடில், சேவர்களால் என்னைப் பிணித்துச் சிறையிடில் தீராதவசையும், சங்கடமும் சம்பவிக்கும். ஆகையால் முன்னதாக இவளுடைய மனதைச் சோதித்தல்வேண்டும். இவளருகில் வைத்திருக்கும் வாசனைத் திரவியங்களை நான் எடுத்துச்செல்வேனாகில் இவள் விழித்தவுடன் சுகந்தங்கள் களவாடப்பட்டிருப்பதைப்பார்த்து, யாரோ ஆடவன் இக்காரியம்செய்திருக்க வேண்டும் என்று நினைத்து நாளைக்கு விழித்திருப்பாள். அப்போது யான் நேரில் பேசிக்கொள்ளுவேன்.

(நிட்கிரமித்தில்.)

புவனசுந்தரி.—சகி வனஜாட்சி! இஃதென்ன புதுமை பார்த்தனையா? நேற்றிரவு யான் நித்திரைக்குச் சென்றபோது உன்னால் அவ்விடம் கொண்டுவந்து வைக்கப்பட்ட வாசனைத் திரவியங்களை ஏதோ என் மனோவியாகூலத்தால் நான் அணிந்துக்கொள்ளாமல் அப்படியே வைத்துவிட்டு சயனித்துக்கொண்டேன். இப்போது அவைகளிருக்கின்றனவா பார்த்தனையா?

வனஜாக்ஷி.—சகி! வாஸ்தவந்தான். அவை காணப்படவில்லை. இவ்வளவு துணிகரமாக ஒருவரும் இவ்விதம் எடுக்கமாட்டார்களே.

புவனசுந்தரி.—சகி! இதனால் என்ன புலப்படுகின்றதென்றால், யாரோ ஒரு சுந்தர புருஷன் இவ்விடம் வந்திருக்கவேண்டும். அவன் இராஜவம்சத்தில் தோன்றிய க்ஷத்திரியனாகவு மிருக்கவேண்டும். என்னைவிட சுந்தரவானாக இருக்காவிடில் அவன் என்னைப்பார்த்து மன்மதனுடைய உபத்திரவத்தினால் என்னைப் பரிசிக்காமல் சென்றிரான். இன்று வந்து போனவன் நாளைக்கும் வராம

லிரான். ஏதோ என்மனதைப் பரிட்சிக்கும் பொருட்டே சுகந்தங்கள் மாத்திரம் அபகரித்துச் சென்றிருக்கிறான். இன்று இரவு விழித்திருந்து அன்னவனைக்காணவேண்டும்.

பூபாலன்.—நேற்றைய இரவு நான் சுகந்த பரிமளங்களை பள்ளியறையிலிருந்து களவாடிவந்த சங்கதி புவனசுந்தரிக்குத் தெரிந்திருக்கும். அன்றிரவு அவள் விழித்துக்கொண்டுதா னிருப்பாள். ஆனால் இரவு 12-மணியாகியும் என் நண்பன் தனஞ்செயன் தூங்காமல் விழித்திருக்கிறான். என்செய்வது...............? நண்பா! ஓ ஓ! நல்ல நித்திரையிலிருக்கிறான்; நான் சமுத்திரக்கரைசேர்ந்து அஸ்வத்தின் மேலேறி புவனசுந்தரியினிடம் செல்வேன்.

புவனசுந்தரி.—சகி வனஜாக்ஷி! நேற்றுவந்த கள்வனைப் பிடிக்க இன்று 12-மணிவரையில் விழித்திருந்தும் யாரும் வரக்காண்கிலேன். ஒருவேளை நம்முடைய சேடியர்களால் களவாடியிருத்தல்கூடும். எனக்கோ நித்திரை வருகின்றது. நீ உன் படுக்கையறைக்குச் செல்வாயாக. நான் சயனித்துக்கொள்ளுகிறேன்.

பூபாலன்.—என்ன ஆச்சரியம்! இன்றுகூட இக்காவலர்கள் நல்ல நித்திரையிலிருக்கிறார்கள். என்ன, நான் நினைத்திருந்ததற்கு முற்றும் மாறாகவே யிருக்கிறது. இன்றைக்கிவள் விழித்திருப்பாளென்று நினைத்தேன். அப்படிக்கில்லாமல் அயர்ந்து நித்திரை செய்கின்றாள். ஒருவேளை நான் நேற்றையதினம் களவாடிச் சென்றதைக் கவனித்திராள் போலும். இவ்விடம் நடந்த சங்கதி ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. காமர்பூங்கொடியே! கற்பகத்தருவே! கருணையங்கொழுந்தே! ஒளியினுட் சுவையே! என் மனத்தை யுறைவிடமாகக் கொண்டிங்கெழுந்தருளிய கண்ணே! நின் வதனகமலப்போதை யணைந்த தென்னுருயிர், அதையே யிறையா யங்கீகரிப்

பையே மானே! நின்னையன்றி யினிமேல் வருங்காலந் தன்னில், யானும், என்னன்பும் வாழ்தலும் வீணே. தேன் மொழிச்செல்வி! நினது கமல இதழ்போன்ற கோமள மான கரங்களால் என்னை யழுந்தப்புல்லி ஆசையைத் தீராயோ? இன்று நீ விழித்திருந்து என் ஆவலைத்தீர்ப்பா யென்று எண்ணியிருந்தேன். நீ நாளை இரவாகிலும் விழித் திருந்து என் மனோரதத்தை நிறைவேற்றுவாயென்று நம்பு கிறேன். உன் கழுத்திலணிந்திருக்கும் இரத்தினமாலையைக் கழற்றிச் செல்வேனாகில் உனக்கு அது ஆச்சரியத்தை யுண்டுபண்ணுமலிராது, இதோ கழற்றிச் செல்கிறேன்.

புவனசுந்தரி.—(விழித்தெழுந்ததும்,) சகி! வனஜாக்ஷி! என்ன ஆச்சரியம். நாம் இருவரும் இரவு 12-மணிவரையி லும் விழித்திருந்தும் யாரும் இவ்விடம் வரவில்லை. பின்பு அயர்ந்து நித்திரைப்போய் விட்டேன். என் பிராணனுக் குச் சமானமான சகி! நான் என்னவென்று சொல்வேன். சொல்ல எனக்கே லஜ்ஜையாக விருக்கிறது. ஆயினும் உன்னுடன் சொல்லாமல் இனியாருடன் சொல்வேன். மூன்று நாளிரவில் இங்கு வாசனைத் திரவியங்கள் களவு செய்யப்பட்டதென்று நான் தெரிவித்ததற்கு, ஏதோ ஒரு போக்காக நீ மறுமொழி புகன்றனை. இப்போதோ, என் கழுத்திலணிந்திருந்த இரத்தினமாலை களவுபோயிருக்கின் றது. இது ஓர் யௌவன க்ஷத்திரிய குலத்தில் பிறந்து, மன்மதனைப்பழிக்கும் ரூபத்தையுடையவனே செய்திருக்க வேண்டுமேயொழிய வேறெவராலும் செய்யப்பட்டதல்ல. ஆ ஹா! இன்னும் சற்றுநேரம் விழித்திராமல் போய் விட்டேனே. எப்படியாகிலும் இன்றிரவு விழித்திருந்து அன்னவனைக்கண்டு தெளிவேன். அவனோ நான் வெறுக் கத்தக்கவனாக இருக்கமாட்டா னென்பது திண்ணம். ஏனெனில் முதல்நாளிரவே என்னைக் கண்டவுடன் அவன்

என்னுடைய நித்திரைக்குப்பங்கம் வரும்படிச்செய்து மன்மதனுல் பீடிக்கப்பட்டவனுகி ஆற்ருது என்னை பலவந்தம் செய்திருப்பான். அல்லது நேற்றிரவாகிலும் அவ்வாறு செய்திருப்பான். அவன் என்னைவிட சுந்தரபுருடனுகவும், நல்ல குலத்திலுதித்தவனுகவே யிருக்கவேண்டுமென்பது தெற்றெனை விளங்குகிறது. சகி! நீ அந்த மஞ்சத்தைச் சிங்காரித்துவை. நான் நித்திரைச் செய்பவள்போல் விழித்திருக்கிறேன்.

(சயனித்துக்கொள்ளல்.)

---

## அத்தியாயம் 8

### பூபாலன் புவனசுந்தரியை காந்தர்வமணம் புரிதல்.

பூபாலன்.—ஓ ஹோ! இன்னும் இக்காவலர்கள் நித்திரையிலிருக்கிருர்கள். இம்மங்கையோ இன்றுகூட நித்திரையிலிருக்கிருள். (சற்று உரத்தத்தொனியுடன்) ஏ! சுந்தராங்கி! இரண்டுநாளாக நான் இவ்விடம் வந்து உன்னுடைய செளந்தரியத்தைப்பார்த்து சகிக்கக்கூடாத மன்மதனுடைய கொடுஞ் செயல்களுக்குட்பட்டிருக்கிறேன். நான் வந்துபோன சங்கதி உனக்குத் தெரிவிக்கவேண்டுமென்று முதல் தினம் களப, கஸ்தூரி முதலிய வாசனைகளையும், இரண்டாம் நாள் நின் கழுத்திலணிந்திருந்த இரத்தின மாலையையும் அபகரித்துச்சென்றேன். அவைகளைப் பற்றி நீ கவனிக்கவில்லையோ? அல்லது புருடனை இச்சிக்கலாகாதென்னும் வைராக்கியத்தினுல் என்னை வெறுத்திருக்கின்றனையோ? யாது மறிகிலேன். என் மனதுக்கிசைந்த சுந்தராங்கி! நின் அழகிய கண்களால் என்னைச் சற்று ஏறெடுத்துப் பார்த்து ஒரு வார்த்தையாகிலும் என்னிடம் வசனிக்கக்கூடாதா? ஆ! என்ன ஆச்சரியம். நான் இவ்வளவு நேரம் என்னுவலைப் பலவாறு மொழிந்தும் இம்மட

நல்லாள் விழித்தாளில்லை. நல்லது இன்றையதினம் இவள் புஜத்திலணிந்திருக்கும் இரத்தினவங்கியைக் கழற்றிச்செல்வேன். இது தப்பாமல் இவளுக்கு நினைப்பு மூட்டாமற் போகாது. ஆகையால் இதைக் கழற்றுகிறேன். என்னே! இக்கரத்தினது வனப்பு! இக்கரத்தினது உருட்சி மூங்கிலைத் தோற்கடிக்கின்றது.

புவனசுந்தரி.—(பூபாலன் கையைப்பிடித்துக்கொண்டு) மங்கையர் மனங்கவரும் சுந்தராங்கா! யாவரும் வருவதற்கியலாத இவ்வாழி மத்தியில், கடுங்காவலைக்கடந்து, அதிக தீரத்துடன் இவண் வந்த தாம் யார்? எனக்கறிவிக்க விரும்புகிறேன்.

பூபாலன்.—ஆயிழையே! அறிவிப்பேன் கேட்பாயாக. யானே விதர்ப்பநாடாளும் கீர்த்திசீல மகாராஜாவின் ஏக புத்திரன். என் நாமதேயம் பூபாலன். யான் முடிசூட்டிக்கொள்ளுமுன் பிரபஞ்சத்தின் இயற்கை சுபாவ மறிய வேண்டி என் தவப்பயனால் கிடைத்த அஸ்வத்தின்மேல்என் மனைவி சுந்தரவல்லியுடனும், மந்திரிகுமாரன் சுபத்தியுடனும் ஆகாயமார்க்கமாகச் செல்லுகையில் எனது மனைவியும், நண்பனும் ஆழியில்விழ, அன்னவர்களுடைய பிரிவாற்றுமையால் யான் மூர்ச்சித்து அஸ்வத்தின் மீது சாய்ந்துவிட்டேன். பிறகு நின் தேசமாகிய மாவிந்தநகரத்தில் சமுத்திரதீரத்திலிறங்கி, தாகவிடாய்த்தீர்த்துக்கொள்ள சமீபத்திலிருந்த ஓர் குளத்தை நாடிச்சென்று நீரையருந்தி மூர்ச்சையடைந்தேன். அவ்விடம் ஓர் தனவந்தனுடைய குமாரனை தனஞ்செயன் என்பவனால் தேற்றப்பட்டு அரசனுடைய இல்லம் அடைந்து அவனால் ஆதரிக்கப்பட்டு வருகையில், நின் விருத்தாந்த மனைத்தையும் அவனால் சொல்லக்கேட்டு நின்னைக் காணவந்தேன். அன்றைய தினம் நீ நல்ல நித்திரையிலிருந்தபடியால் நின்னை எழுப்ப

லாகாதெனஉன் சமீபம் வைத்திருந்த வாசனைத் திரவியங்களைக் களவாடிச் சென்றேன். மறுநாளும் நீ நித்திரையிலிருந்தபடியால் உன் இரத்தினமாலையைக் கவர்ந்துச்சென்றேன். இன்றும் நீ நித்திரையிலிருந்தபடியால் உன் புஜத்திலணிந்திருக்கும் இந்த இரத்தின வங்கியைக்கழற்றுகையில் நீ விழித்துக் கொண்டனை. அமிருதகலைகளால் அகில லோகங்களையும் ஆனந்திப்பிக்கின்ற பூர்ணேந்துவையொத்த வதனமுடைய ஹே சுமுகி! உனது அங்கசௌந்தரியம் முற்றும் பார்க்கப்பதினுயிரங் கண்களிருப்பினும் போதா! கொடிய பாவிமதனன் என்னைக் கொல்கிருன். என்மேல் கிருபைசெய்து என்னுடைய அழகிய கைகளால் என்னைத்தழுவி யாதரிக்கவேண்டும். நீ தனியாய் இவ்விடமிருப்பதில் யாது சுகம். தந்தியில்லாத வீணையும், சக்கிரமில்லாத இரதமும்போலுமன்ருே பதியில்லாத ஸ்திரீகளின் வாழ்க்கை.

புவனசுந்தரி.—(தனக்குள்) ஹா! என்ன இம்மன்னவனது சுந்தரம்?

"திருக்கிளர் முகமும் வேர்வும் சிறந்தசெம் பவளவாயும்
மருக்கிளர் மாலைமார்பும் மகரகுண் டலமுங்காதும்
சுருக்கிய மருங்குங்கண் டாற் றுடியிடை மடவாராவி
இருக்கினு மிருக்குநில்லா திறக்கினு மிறக்குமன்றே.,,

ஹா! இவரது,

"நிரந்தர வுரோமரேகை நீலமும் வயிறுமார்பும்
புரந்தர சாபமொத்த புருவமு நுதலும்பட்ட
மரந்தழைத்திட நகைக்கு முறுவலு மாயன்றன்பால்
கரந்தவா ரமுதச்சொல்லும் கந்தர்க்கு மில்லையன்ருே."

(பஹிரங்கமாய்) மங்கையர் மனங்கவரும் மன்னவா! தாம் முதல்நாளிரவு இங்குவந்து வாசனைத் திரவியங்களையும், இரண்டாநாளிரவு யான் கழுத்திலணிந்திருந்த இரத்தின

மாலையையும் களவாடிச்சென்ற காரணம் யாது?

பூபாலன்.—ஆயிழையே! அப்படி யான் செய்ததற்குக் காரணம் யாதெனில், யான் உன்னுடைய மனநிலையை நாடாமல் திடீரென உன்னை யான் எழுப்புவேனுகில் ஒருவேளை நீ சீற்றங்கொண்டு காவலாளிகளுக்குத் தெரிவிக்க நேரிடின் யான் அதிகத் துன்பத்துக்குள்ளாக வேண்டுமே என்னும் எண்ணத்துடன் யான் இவ்வாறு செய்யத்துணிந்தேன். இனி உன் இன்பரசமான கோகிலத்தொனியையும், மாறனை மருட்டும் வில்லைப்போன்ற உன் புருவத்தினழகையும் யான் பார்த்தவுடன், இனி அவ்வித சிட்சைக்கு யான் அஞ்சேன். ஆரணங்கே! உன் அன்பான கடாக்ஷமென்னும் மாலைகள் என்மனதைப் பலாத்காரமாய்க்கட்டி உன்னையணைய இழுக்கின்றது. திருமாலையும் மயங்கச் செய்வதான வசீகரத்தையுடைய ஸ்ரீதேவி வாசம்பண்ணுகின்ற சிவந்த சிதள்களையுடைய செந்தாமரை மலரும், விரிவான பெருமையையுடைய வேதசாஸ்திரங்களைச் சொன்ன சதுர்முகப் பிரமதேவன் உற்பத்தியான வெண்டாமரை மலரும் உன் வதனத்துக்கு ஈடாகமாட்டாது.

மந்தகமனு!

“அறந்திகழ் தவமினி யகிலமு மிதனு
 லழியுமென் றயன்படைத் திலனே
சிறந்தவேல் விழியை முன்படைத் தயர்ந்து
 செங்கரஞ் சேர்ந்ததோ திகைத்து
மறந்ததோ கரந்து வைத்ததோ களப
 வனமுலைப் பொறை சுமந்துருகி
இறந்ததோ உளதோ இல்லையோ இனிமே
 லெய்துமோ வுன்னுட னிடைதான்.”

பெண்ணரசே! உன் மாசற்ற வடிவைக்கண்டுதான் சந்தி

ரன் நாணமுற்று தன் கிரணங்களை யெல்லாம் மறைத்து நாளுக்குநாள் தேய்ந்து நலிந்து விடுகின்றனனோ? உன் வசனாமிருதத்தை யுண்டுதான் குயிலினங்கள் அஞ்சுகின்றனவோ? உன்னடையைக் கண்டுதான் அன்னப்பேடுகள் அசர்ச்சிக் கொள்ளுகின்றனவோ? ஏ பத்மாக்ஷி! என்மீது கருணைபுரிந்து எந்தனை யாலிங்கனஞ்செய்து நினது அதராமிருதத்தைத் தருதியேல் யான் எனது உடல், பொருள், ஆவிமூன்றையு முனக்கே ஒப்புவித்து நினக்கே அடிமை செய்வேன்.

புவனசுந்தரி.—என் ஆருயிர்க்காதலா! தாங்கள் இவ்வளவு பரவசம் செய்ததே போதுமானது. நான் இவ்வளவு தூரம் கேட்டேனென்று நீர் ஆயாசப்படவேண்டாம், தங்களுடைய குணாதிசயங்களையும், சுந்தரத்தையும், நீர் செய்த சோரகிருத்தியங்களாலேயே யான் அறிந்தேன். இனி நாமிருவரும் மனமொத்து காந்தருவமணமாகக் கூடுவோம்.

(இருவரும் பள்ளியறைக்கு நிட்கிரமித்தல்.)

பூபாலன்.—ரமணீ! உதயக்காலம் சமீபிக்கிறது. யான் மூன்றுதினங்களாக என் மித்திரன் நித்திரையி லிருக்கும் போது யான் இங்கணுகி, பின் உதயகாலத்தில் அவன் விழித்துக்கொள்ளுமுன் யான் அவன் பக்கலில் சயனித்துக்கொள்வது வழக்கம். ஆகையால் இன்றும் அவ்வாறே செல்லவேண்டும். உத்தரவு கொடுப்பாயாக.

புவனசுந்தரி.—நாதா! தாங்கள் என்னைவிட்டுப்பிரிவதென்றால் என்மனம் சகிக்கவில்லை. ஆனபோதிலும் நாம் இருவரும் இவ்விடம் விட்டு தங்களுடைய நாட்டைச் சேரும் வரையில் யாருக்கும் தெரியாமலிருக்கவேண்டுமாகையால் அப்படியே தாங்கள் பகற்காலத்தில் தம்முடைய சினேகரிடமிருந்து இரவானதும் இங்கு வந்துக்

கொண்டிருக்க வேண்டியது. தாங்கள் அடுத்த இரவு அதிதீவரமாகவந்து என்னை யாதரிக்கவேண்டும்.

தனஞ்சேயன்.—என்ன விந்தையாயிருக்கிறது. என் நண்பன் தருமநந்தனைக் காணேம். இந்த இரவில் எங்கு சென்றிருப்பான். இப்போதே இரவு 3-மணியாகின்றது. அவன் செல்லக்கூடிய இடம் இன்னநரத்திலெங்குள்ளது? எனக்குத் தெரிவிக்காமலும் எங்கு சென்றிருப்பான்? ஒருவேளை நான் அவனுக்குத் தெரிவித்திருந்த புவனசுந்தரியின் இருப்பிடம் சென்றுனே? அவ்விடம் சென்றிருப்பானுகில் தப்பாது ஆங்கு துன்பம் நேரிட்டிருக்கும். என்ன என் துர் அதிர்ஷ்டம்! நல்ல குணமமைந்த நண்பன் எனக்குக் கடவுளுடைய கிருபையால் கிடைத்தானென்று மகிழ்ந்திருந்தேன். என்னுடைய வாக்கினுலேயே நான் கெட்டேன். அந்த புவனசுந்தரியைப்பற்றி நான் அவனுக்குத் தெரிவிக்காமலிருந்தால் அவன் அவ்விடம் போகான். இனி என்ன செய்வது? அவனுக்கு என்ன ஆபத்துகள் அவ்விடம் ஏற்பட்டதோ? யாது மறிகிலேன். ஆ! இதோ என் நண்பன் அதிதீவிரமாக வருகின்றுன். நண்பா! இன்றிரவு நீ எங்குசென்றனை? உன்னைக்காணுது மிகவும் வருந்தினேன்.

பூபாலன்.—நண்பா! உன்னிடம் நடந்த சவிஸ்தாரத்தை யுறைக்காவிடில் இனியாருடன் சொல்லப்போகிறேன். நீ புவனசுந்தரியின் ரூபலாவண்யத்தைச் சொன்னதுமுதல் எனக்கு அவள்மேல் அதிக தாபமுண்டாகி மூன்று நாளிரவில் நீ சயனித்து நித்திரைப்போனவுடன் யான் ஆழிமத்தியகிரகம் சென்று புவனசுந்தரி அதிக நித்திரையிலிருந்தமையால் எழுப்பின் என்ன ஆபத்து விளையுமோவென அஞ்சி, அவள் மனதைச் சோதிக்கக் கருதி அவள் சமீபம் வைக்கப்பட்டிருந்த சுகந்த பரிமளங்

களைக் கவர்ந்து வந்தேன். இரண்டா நாளிரவில் மறுபடி யும் ஆங்குச்சென்று, அக்கட்டழகி முன்போல் நித்திரையி லிருந்தமையால் அவள் கழுத்திலணிந்திருந்த இரத்தின மாலையைக் கழற்றிக்கொண்டு வந்து விட்டேன். இவ்விரண்டு இரவிலும் நீ நித்திரையைவிட்டு எழாமுன் நான் உன் சமீபம் வந்து சயனித்துக்கொண்டேன். இன்றிரவோ அங்குச்சென்றதில் அவ்வணங்கு நித்திரையிலிருப்பதாக வெண்ணி கையிலணிந்திருக்கும் இரத்தின வங்கியைக் கழற்றுகையில் அக்கன்னி என் கரத்தைப் பற்றிக்கொண் டாள். பின் என் விருத்தாந்தங்களைத் தெரிவித்தபின் என்மேல் விருப்பமடைந்து என்னைக் காந்தர்வமணம் செய்துக்கொண்டாள்.

தனஞ்சேயன்.—நண்பா! உனக்கு மங்களமுண்டாகுக. நீ அவளுடைய நேசத்தைப்பெற்று அவளைக் காந்தர்வ மணம்புரிந்ததைப்பற்றி நான் மிகவும் சந்தோஷிக்கிறேன். உனக்கு அவ்விடம் ஏதாகிலும் ஆபத்துக்கிடமாகுமென்றே நீ அங்கு செல்லக்கூடாதென்று முன் நான் தடுத்தேன். ஆனால் நீ இவ்வளவு சாமார்த்தியமாய் அவளிடம் அணுகக் கூடியவரென்று நான் உணர்ந்திலேன். இனி நீ இன்று முதல் பிரதிதினமும் இரவில் அவ்விடம் சென்று பகலில் என் மனைக்கேவந்து விடவேண்டும். ஏனெனில் பகற் காலத்தில் அவ்விடம் காவற்காரர் முதலியோரால் நீ கண்டு பிடிக்கப்படின் புவனசுந்தரியின் சிற்றன்னையான ரூபாவதி யினால் கொடுந்தண்டனைக்குள்ளாவாய்.

(நிட்கரமித்தல்.)

புவனசுந்தரி.—சகி! வனஜாக்ஷி! பார்த்தாயா என் சாமர்த்தியத்தை? இரண்டு நாள் கள்ளத்தனமாகவந்துச் சென்றவரை கையும்பிடியுமாகப் பிடித்து விட்டேன்.

வனஜாக்ஷி.—சகி! நீ ஒன்றும் எனக்கு விஸ்தார

மாகச் சொல்லவேண்டுவதில்லை. அன்றிரவு நடந்த சங்கதிகள் யாவும் நான் திரைமறைவிலிருந்து அறிந்தேன். உனக்கேற்ற புருஷனென்றும் அவன் சவுந்தரியத்தையும் கண்டு மகிழ்ந்தேன். மற்றச் சேடியர்களுக்கும், காவற்காரர்களுக்கும் அவர் இங்குவந்து போவது தெரியாதிருத்தல் வேண்டும். இராவிடில் உன் சிற்றன்னையால் கொடுந்தண்டனை நமக்கு சம்பவிக்குமென்பது திண்ணம்.

பூபாலன்.—என் கண்மணியை இப்பகல் முழுதும் பார்க்காமலிருப்பது மிகவும் கஷ்டத்துக்கிடமாக விருக்கிறது. இப்போதுதான் சூரியபகவானும் மெதுவாக மேற்றிசையாகும் மங்கையர் செவியில் அணியும் செங்குவளை மலர்போல் இவ்வுலகம் விட்டு சாய்கின்றான். பங்கயப் பூக்கள் பகலில் பானம்செய்த வெயில் அனைத்தையும் அடியோடு அகற்றும்பொருட்டு உள்நுழையும் இதழ் இதழான இருள்களுக்கேற்க வண்டுகளின் இனங்கள் செந்தாமரை மலர்களின் உட்புறங்களிற் புகுந்துகொண்டன. அந்திப் பொழுதின் செவ்வானமும் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. சந்தனக்குழம்பின் வெள்ளத்தை வாரியிறைக்கின்றது போலும், அமுதக்கடல் பெருக்கைக் கொப்பளிப்பதுபோல் சந்திரமண்டலம் தனது நிலவினால் இவ்வுலகமனைத்தையும்நனைந்துவிட ஆதிவராகனது கோரப் பல்லின் வலயத்திற்கொப்பான சந்திரனால் பாற்கடலிலிருந்து பூமண்டலம் பெயர்த்தெடுக்கப் படுவதுபோல் தோன்றுகிறது. இனி யான் என் நாயகிபாற் செல்கின்றேன். காதலி! இன்று பகற்பொழுதைக் கழிப்பது எனக்கு மிகவும் பிரயாசையாய் ஏற்பட்டது. இப்படியே பிரதிதினமும் காலத்தைக் கழிப்பதென்றால் வெகு கஷ்டத்தை யான அனுபவிக்க நேரிடும்போல் தோன்றுகிறது. ஆகையால் கூடிய சீக்கிரத்தில் என்னாட்டிற்கு உன்னை

யழைத்துச்செல்ல முயலுவதே தகுதி.

புவனசுந்தரி—நாதா! என்மனதிற் றோன்றியதை தாமே மொழிந்தீர். பகற்காலங்களிற் தம்மை விட்டுப் பிரிந்திருத்தல் மிகக்கடினமாக விருக்கிறது. இன்று முழுதும் அந்தப்புரத்து உப்பரிகையில் ஏறி தோழிமாரையும் விட்டு விட்டு நான் ஒருத்தியாகவே மணிமயமான சாளரத்தின்கண் முகம் வைத்தவளாய் நீர் சென்றிருக்குந் திசையைப் பார்த்துக்கொண்டே யிருந்தேன். அத்திக்கிலிருந்துவரும் வாயுவினிடமிருந்தும், வனத்தின் மலர்களது மணத்தினிடமிருந்தும், பறவைகளின் தொனியினிடமிருந்துங்கூட உம்முடைய விருத்தாந்தத்தைக்கேட்க ஆவலுள்ளவளாக விருந்தேன். வெகுதூரத்திலிருக்கும் கதிரவனுக்கு எதிராக மலரும் கமலம்போல் எதிர்முகமாக விருந்தேன். ஆகையால் உம்மைப் பிரிந்திருப்பதில் எனக்கு வருத்தத்தையுண்டாக்குகிறது. தம்முடன்கூட தம்முடைய நாட்டிற்குவர சித்தமாயிருக்கிறேன்.

பூபாலன்.—காரிகையே! இன்று உதயம் யான் நகரஞ்சென்று என் நண்பன் தனஞ்செயனிடம் விடைபெற்றுக் கொண்டு வருகிறேன். நாளைக்கே நம்முடைய நகரஞ்செல்வோம். சென்று வருகிறேன்.

(நகரஞ்சேர்தல்.)

தனஞ்செயன்.—நண்பா! பிரதிதினமும் நீ ஆழிமத்தியகிரகம்சென்று வருமளவும் நான் உயிரைவிட்ட உடல்போல் இருக்கிறேன். எந்த சமயத்தில் உனக்கென்ன ஆபத்து நேரிடுமோ என்னும் வியசனம் எனக்கதிகரித்திருக்கிறது. அறியவேண்டியவை யனைத்தையும் அறிந்து, கல்விகளை எல்லாம் கற்ற உந்தனுக்கு உபதேசிக்க வேண்டிய விஷயம் சிறிது மிலது, என்றாலும் வாலிபப்பருவத்தினுண்டாகும் அஞ்ஞானமாகிய இருளோ தீபங்களின் ஒளிக

ளால் நீக்கக்கூடாததும், சூரியனாலும் விலக்கமுடியாததுமான அவ்வளவு மிகவும் அடர்த்தியானது. விருதாப்பிய காலத்திலும் தணியாததான செல்வச்செருக்கினால் உண்டாகும் இறுமாப்பு மிகக்கடுமையானது. பிரபுத்தன்மையென்னும் இம்மாசுபடர்ந்த ஆந்தகத்தன்மையானது எவற்றாலும் அகற்றக்கூடாததா யிருக்கின்றதென்பது மற்றொரு துன்பமாகுமெனக் கருதியே உமக்குத் தெரிவிக்கிறேன். பிறவிச்செல்வம் வாலிபப்பருவம் நிகரில்லாவடிவழகு மானிடத்தன்மைக்கும் மேலான திரமை என்கிற இவை யாவும் மஹத்தான தீங்குகளின் பரம்பரைகளல்லவா? இவைகளில் ஒவ்வொன்றுமே அவ்விஷயம் அனைத்திற்கும் ஆதாரமாகும். ஆனதால் அவ்வெல்லாவற்றினது சேர்க்கையதென்பதைக் கூறவும் வேண்டுமோ? யௌவன ஆரம்பத்தில் அறிவானது சாதாரணமாய் சாத்திரங்களென்னும் நீரினால் அலம்பப்பெற்று நிர்மலமற்று இருந்தபோதிலும் கலங்கி விடுகின்றது. மண்ணைச்சுழற்றி வாரிக்கொண்டு சிதறிக்கிடக்கும் இலைச்சறகுகளை இழுத்துச்செல்லும் சுழற்காற்றுப்போல பிரகிருதியென்னும் மாயையானது இரஜஸ் என்னும் குணத்தினாலுண்டாகும் ப்ரவாகத்தையுண்டு பண்ணி தனதிஷ்டப்படி புருடனை இளமைப் பருவத்தில் வெகுதூரம் வலுவில் இழுத்துவிடுகின்றது. சிற்றின்பங்களிலுண்டாகும் பெரும் பற்றானது திக்பிரமைபோல் துன்மார்க்கங்களில் செல்லத்தூண்டி, மனிதனை மிகவும் நாசமடையச்செய்கின்றது. பிரகாசம் பொருந்திய படிக மணியில் சந்திர கிரணங்கள் போல மாசற்ற மனத்திலல்லவோ உபதேச குணங்களெல்லாம் நன்றாக நுழையும். மூத்தோர் சொல்லும் வார்த்தை நிர்மலமாகவே யிருப்பினும் அது கேடுண்ட மானிடரின் காதுகளில் நீரைப்போல சென்று, அவர்களுக்கு மிகவும் துன்பத்தையே தருகின்

றது. மற்றவர்களுக்கோ யானைகளுக்குக் கன்னத்திலிட்ட ஆபரணம்போல் சோபையை மிகுதியாய் உண்டாக்குகின்றது. மிகவும் மலினமான இருள் அனைத்தையும், அந்திப் பொழுதிலுதிக்கும் அம்புலிபோல், உபதேசமானது சமஸ்த தோஷங்களையும் நீக்கும் மன்மதபாணங்கள் தாக்கிச் சிதறுண்ட இருதயத்தில் உபதேசிக்கும் யாவும் சில்லிக் கலத்திலிட்ட நீர்போல் ஒழிகிவிடும். ஆதலால் நண்பா! நீ இன்று முதல் புவனசுந்தரியினிடம் போகாமல் அவள் நட்பை மறந்துவிடு. மற்றோர் சங்கதியை உன்னிடம் சொல்ல மறந்தேன். அதாவது, என்பிதா வயோதிகத்தினால் அவர் இதுவரையில் செய்திருந்த வியாபாரத்தைச்செய்ய அசக்தராய் என்னை அத்தொழில் செய்ய உத்தரவிட்டமையால் யான் சென்றுவருகிறேன். நான் வருமளவும் நீ இவ்விடத்தை விட்டகலாமல் இரவும் பகலும் இவ்விடத்திலிருக்கும் ஐசுவரியத்தைப் பாதுகாத்திருத்தல் வேண்டும். அப்படிச் செய்யாவிடில் கள்ளர் முதலியோரால் இவ்விடத்திலிருக்கும் சொத்துக்களெல்லாம் அபகரித்துக் கொள்ளக்கூடும். இது விஷயமாக உம்முடைய அபிப்பிராயம் இன்னதெனத்தெரிய ஆவலுள்ளவனா யிருக்கிறேன்.

பூபாலன்—(தனக்குள்) ஆ! நாம் ஒன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்ததே! நாம் நமதாருயிர்ப் பிரியையுடன் இன்றிரவு நமது நகரஞ்செல்வதாய், நண்பனிடம் சொல்லி விடைபெற்று வருவதாயும், பிரயாணத்திற்குச் சித்தமாயிருக்கத் தெரிவித்திங்குவர, நண்பன் தெரிவித்த சங்கதியைக்கேட்க ஒன்றும் தோன்ற வில்லையே! அவனுடைய வார்த்தையை மறுப்பதோர் அழகல்ல. நான் நண்பன் திரும்பி வருமளவும் நாயகியினிடம் செல்லமுடியாது. நாயகியோ என்வரவை யெதிர்பார்த்து மிகத் துன்பப்படுவாள். இதற்கென்ன செய்யலாம்? நண்பன்

சொன்னப் பிரகாரம் அவன் திரும்பிவருமளவும் இங்கிருந்து பிறகு நம் காதலியினிடம் சென்று சமாதான முரைத்துப்பின் நகரஞ்செல்லலாம், இதைவிட வேறு செய்யத்தக்க தொன்றுமில்லை. (பஹிரங்கமாய்) நண்பா! உன் வார்த்தையையும் யான் தடுத்து மறுமொழி பகர்வேனோ? நீ எனக்குச்செய்த உதவிக்கு நீ பணித்த இச் செயலை யான் செய்வது பெருங்காரியமா? அப்படியே நீ வியாபாரம் செய்துத் திரும்பி வருமளவும் நொடிப் பொழுதேனும் இவ்விடம் விட்டகலமாட்டேன். நீ சுகமாகச்சென்று வரலாம்.

(நிட்கிரமித்தல.)

புவனசுந்தரி.—சகி, வனஜாக்ஷி! என்னை நகரத்திற் கழைத்துச் செல்வதாக சொல்லிப்போன மன்னன் இது வரையில் வராத காரணம் யாதொன்றும் விளங்கவில்லை. என் மனம் மிக்க கவலைப்படுகின்றது. இன்னது செய்வதென்று எனக்குப் புலப்படவில்லை. அவர் இங்கு வந்துச் சென்று மூன்று தினங்களாகின்றன. என்னைச் சினேகித்த நாள் முதல் இதுவரையிலும் ஒரு நாளாகினும் இவ்விடம் வாராம லிருந்ததில்லை. நானோ இப்போது கர்ப்பவதியாய் விட்டேன். இந்த நிலையில் அவர் என்னைவிட்டு நீங்குவாராயின் என் கதி என்னமாகும்? ஒருவேளை அவர் தன் நகரம் சேர்ந்தனரோ? என் கதி என்னவாய் முடியுமோ? என் சிற்றன்னையால் எவ்வித கஷ்டங்களை யனுபவிக்க வேண்டி இருக்கிறதோ? சகி! அவர் வார்த்தையை நினைக்குந்தோறும் என் மனம் பதைக்கின்றது. என்னுயகன் என்னைவிட்டுப் பிரிந்தபிறகு யான் உயிர் வைத்திருப்பானேன். ஆகையினால், சகி! யான் இவ்வாழியில் விழுந்து ஆழ்ந்து இறப்பதே தகுதி. இனி அரைக்கணமும் உயிர் வைத்திரேன்.

வனஜாக்ஷி.—தேவி! போதும், போதும். முகாந்தரமேதுமின்றி மரணத்திற்காக ஏன் முயல வேண்டும்? ஸ்தோத்திரிக்கப்படாமலே அருள்புரிந்த அனங்கபகவானலேயே உமக்கு வரன் கொடுக்கப்பட்டது. இதில் யாரையும் நிந்தித்தாவதில்லை. மன்மதனே குருவைப் போல் கன்னிகையை (விவாகத்திற்கு) சங்கல்பிக்கிறான். தாயைப்போல் அநுபோதி அளிக்கின்றான். தந்தையைப் போல் தாமதம் செய்கின்றான். தோழியைப்போல் காதலையுண்டாக்குகின்றான். தாதியைப்போல் வாலிபப் பருவத்தில் காமோபசாரத்தைக் கற்பிக்கின்றான். சுயமாகவே உன்னைப்போல் கணவரை வரித்துக்கொண்டவர் அநேகரிருக்கின்றார்கள். அங்ஙனமில்லையேல் தர்மசாஸ்திரங்களிற் கூறப்பட்டுள்ள சுயம்வர விதியானது பொருளற்றதாகவேயாகும். ஆகையால் தேவி! மரிக்கவேண்டுமென முயற்சித்ததை நீக்குவாயாக. இத்தகைய சபலமான செய்கைகளெல்லாம் துன்மார்க்கனான அம்மன்மதனுடையதே. தேவி! மன்மதன் வடிவமும் உருவமுமிழந்த நெருப்பு ஜ்வாலைகளின் வரிசையை விளக்கிக் காட்டாமலே இவன் தாபத்தைத்தருகின்றனன். புகையை வெளிப்படுத்தாமலே கண்ணீரை வீழ்த்துகின்றான். இவனுடைய பாணங்களின் இலக்குக்கு இதுவரையில் அகப்படாமற்போனது, அல்லது அகப்பட்டுக்கொண்டிராதது, அல்லது இனி அகப்படாமலிருக்கப் போகின்றது என்கிற அத்தகையதேதுமே இவ்வளவு பெரிதான மூவுலகிலுமிலது. இவனிடமிருந்து தப்பித்துக்கொண்டவர் எவருமிலர். புஷ்பமயமான உமது பாத பங்கஜங்களைப் பரிசித்து சபதம் கூறுகின்றேன். கட்டளையிட்டு என்னை யனுப்பும். நான் சென்று உமது மணாளனை யழைத்துவருகிறேன்.

[நகரம் செல்லல்.]

பூபாலன்.—வனஜாக்ஷி! நான் இருக்குமிடம் எவ்வாறு தெரிந்துக் கொண்டனை? எனதன்பிற்கிசைந்த புவனசுந்தரி சுகமா?

வனஜாக்ஷி.—இராஜகுமாரா! தாங்கள் புவனசுந்தரியை உம்முடைய நகரத்திற் கழைத்துப்போவதாக வாக்களித்து இத்தனைநாள் வரையிலும் வராமற் போனதற்காக மிகவுப் துயரப்பட்டுக்கொண் டிருக்கிறாள். இதுவரையிலும் புவனசுந்தரி உயிரோடிருக்கின்றனளோ என்னமோ தெரியாது, அப்படி உயிர் துறந்திருப்பாளேயாமாயின் அப்பெண் கொலை உம்மைத்தான் சேரும். இனி நான் இவ்விடம் காலஹரணம் செய்வதில் பயனில்லை. நான் சென்று வருகிறேன்.

பூபாலன்.—வனஜாக்ஷி! என் நாயகிக்குத் துயரத்தை யுண்டுபண்ணி உயிர் துறக்கத் துணியச்செய்தேனுகையால் இனி யான் உயிரோடிறேன். இதோ என் வாளால் சிரச்சேதம் செய்துக்கொள்ளுகிறேன்.

வனஜாக்ஷி.—(இராஜ குமாரன் கையை பிடித்துக் கொண்டு) ஆரியபுத்திரா! அவசரப்படவேண்டாம் புவனசுந்தரி ஜீவனுடனிருக்கிறாள். உம்முடைய மனதைச் சோதிக்க அவ்வாறு மொழிந்தேன். தாங்கள் இதுகாறும் அங்கு வராமையால் தங்களுக்கு என்ன ஆபத்து சம்பவித்ததோ என்னும் துயரத்தால் மாத்திரம் வருந்துகின்றாள். நான் பலவாறு அவளுக்குத் தேறுதல் சொல்லி உம்மை நேரில் கண்டு சங்கதி தெரிவிப்பதாகச் சொல்லி வந்தேன். தாங்கள் அங்கு வராமலிருக்கும் காரணமென்ன?

பூபாலன்.—வனஜாக்ஷி! என் நண்பன் வியாபார நிமித்தமாக வெளியிற்சென்றமையால் அன்னோன் திரும்பி வருமளவும் அரைக்கணமேனும் வீட்டை விட்டகலாமல் இருக்கப் பணித்தமையால் இங்கு இருக்க நேரிட்டது.

ஆபத்தில் காப்பாற்றிய நண்பனுடையவேலையை அசட்டை செய்யலாமா? ஆனால் சொல்பதினங்களுக்குள் புவனசுந்தரி அவ்வளவு துயரத்திற்குள்ளாவாளென்று நான் நினைத்ததில்லை, இன்னம் 3-தினங்களில் நான் அங்குவந்து புவனசுந்தரியை என் நகரத்திற் கழைத்துச் செல்கின்றேன். ஆகையால் அதுவரையிலும் என் காதலியைத் துயரப்படாமலிருக்கும்படி தெரிவிப்பாய். இதோ கடிதமும் எழுதித்தருகிறேன். அதை புவனசுந்தரியினிடப் பத்திரமாய்ச் சேர்க்கவேண்டும்.

(சீட்கிரமித்தல்.)

வனஜாக்ஷி.—சகி! நீ இனி துயரத்தைவிடு. நின் மனதுக்கிசைந்த மணாளனைக் கண்டேன். நீ துயரப்படுவதாக யான் தெரிவித்ததும் உடனே அவர் உயிர் துறக்க முயன்றார். நான் தடுத்து அவருடைய மனதைத் தேற்றினேன். இன்னும் 3-தினத்தில் உன்னைத் தன் நகரத்துக் கழைத்துப் போவதாகவும் அதுவரையிலும் துயரப்படாமலிருக்கும்படிச்சொல்லி இக்கடிதமும் வரைந்துத் தந்தார். (கடிதத்தைப் பஹிரங்கமாய் வாசித்தல்.)

"என் அன்பிற்கிசைந்த ஆசைநாயகி புவனசுந்தரிக்கு நாயகன் பூபாலன் வரைந்த லிகிதம். பிரியே! நின்னை என் நகரத்திற்கு அழைத்துப் போவதாகச் சொல்லிவந்த பிறகு என் நண்பன் வியாபார நிமித்தம் வெளியிற் சென்றமையால் அவன் உத்தரவின்படி அவன் வருமளவும் இவ்விடம் இருக்கநேரிட்டது. இன்றைக்கு மூன்றாம்நாள் கட்டாயம் உன்னை வந்தழைத்துக்கொண்டு என் நகரம் செல்கின்றேன். அதுவரையிலும் நீ பொறுத்துக்கொண்டிருக்கவும்."

(ஜெயசீலனும், ரூபாவதியும் புவனசுந்தரியைப்பார்க்க அவ்விடம் வரவும், கடிதத்தை வாசிக்கும் சப்தம் கேட்டு

மறைவாக நின்று உற்றுக்கேட்டுப் பிறகு நகரஞ் செல்லல்)

ரூபாவதி.—நாதா! நாம் நமது புத்திரி புவனசுந்தரியைப் பார்த்து வரலாமென்று ஆழிமத்திய கிரகத்தையடைந்ததும் அங்கு அவள் வாசித்துக்கொண்டிருந்த அவள் சோர நாயகனுடைய சங்கதியை நினைக்குந்தோறும் என் மனம் கொதிக்கின்றது. தமது கீர்த்திக்குப் பங்கத்தையுண்டுபண்ணி, தானே சுயமாக ஓர் நாயகனை வரித்துக்கொண்டு அன்னவனுடன் சேர்ந்து நகரஞ் செல்ல ஆயத்தமாயிருக்கிருள். தாங்கள் சக்கிரவர்த்தியா யிருந்தென்ன. இதைவிட அவமானம் வேறு வேண்டுமோ. அவளே என் வயிற்றில் பிறந்தவளாயிருக்கின் இப்போதே அவள் உயிரைப் போக்கியிருப்பேன்.

"கற்பூரப் பாத்திகட்டி கஸ்தூரி யெருபோட்டுக்
கமழ்நீர் பாய்ச்சி
பொற்பூர வுள்ளியினை விதைத்தாலும் மதன்குணத்தைப்
பொருந்தக் காட்டும்
சொற்பேதை யருக் கறிவிங் கினிதாக
வருமெனவே சொல்லினுலு
நற்போதம் வாரா தாங்கவர் குணமே
மேலாக நடக்குந்தானே."

என்பதுபோல அவளுக் கறிவு வுண்டுபண்ண வெண்ணி ஆழிமத்தியில் வீடு ஏற்படுத்தி ஆடவர் அணுகாவண்ணம் காவல் நியமித்து வைத்தபோதே ஒரு சோரநாயகனை சம்பாதித்துவிட்டாள். இதுகாறும் அரண்மனையில் அவளுடைய இச்சையின் வண்ணம் விட்டிருந்தால் இன்னும் எத்தனை சோரநாயகர்களை அடைந்திருப்பாளோ? இவ்விதமாக நம் குடும்பத்திற்கு அவமானம் விளைத்தவளை தாங்கள் என்னசெய்ய உத்தேசித்திருக்கிறீர்.

ஜெயசீலன்.—காதலி! இது விஷயத்தில் என்னைக்

கேட்பானேன். உனக்கே எல்லா சுதந்தரமும் யான் கொடுத்திருக்கையில் உன் அபிப்பிராயப்படிச் செய்யலாம். எனக்குக் காலஹரணமாகின்றது, யான் சபைக்குச் செல்கின்றேன்.

ரூபாவதி.—அரசனே எல்லா அதிகாரத்தையும் நமக்குத் தந்துவிட்டனர். இனி அவள் சுகமாக நாயகனுடன் நகர் செல்லுவதைப் பார்க்கிறேன். சகி! அதிசீக்கிரம் சென்று புவனசுந்தரியை இங்கழைத்துவா.

வனஜாக்ஷி.—புவனசுந்தரி! இன்று நாமிருவரும் உன் நாயகனுடைய கடிதத்தை வாசித்துக்கொண்டிருக்கையில் உன் தந்தையும், உன் சிற்றன்னையும் நாமிருந்த அறைக்குச் சமீபம்வந்து மறுபடியும் திரும்பிப் போய்விட்டதாக காவற்காரனா லறிந்தேன். உன்னைப் பார்க்காமல் ஏன் திரும்பி விட்டார்களோ தெரியவில்லை.

புவனசுந்தரி.—சகி! இனி என்ன செய்யப்போகிறேன். நான் என் நாயகருடைய கடிதத்தைப் படித்துக்கொண்டிருக்கையில் ஒருவேளை அவர்கள் கேட்டுத் திரும்பிவிட்டார்கள் போலும். என் சிற்றன்னையாகிய அப்பாதகி இனி என்ன செய்வாளோ!

"அத்திரியின் மலரும்வெள்ளை யாக்கைகொள் காக்கைதானும்
பித்தர்தன் மனமும்நீரிற் பிறந்தமீன் பாதந்தானும்
அத்தன்மால் பிரமதேவ னுலள விடப்பட்டாலும்
சித்திர விழியாள்நெஞ்சந் தெரிந்தவ ரில்லையாமே.

ஆகையால் என்மனம் வருந்துகின்றது.

வனஜாக்ஷி.—நீ யாதொன்றுக்கு மஞ்சவேண்டாம். உன் சிற்றன்னை ஏதாகிலும் உனக்குத் துன்பம் செய்வாளாயின் உன் நாயகர் சாமான்னியரன்று. அவர் உன் துயரத்தை நீக்குவார். அதோ உன் சிற்றன்னையின் சகி வருகிறாள். நீ தைரியமாக விரு

சகி.—புவனசுந்தரி! நமஸ்கரிக்கின்றேன். உன் சிற்றன்னை உன்னை யழைத்துவரச் சொல்லினள்.

புவனசுந்தரி.—சகி! ஏது நல்லகாலம். இதுவரையிலும் என்னைக் கொடிய காவலில் வைத்திருந்தவள் இப்போது அழைத்துவரச் சொன்னதின் காரணம் ஏதோ அறிகிலேன். என் நன்மைக்கோ அல்லது தீமைக்கோ தெரியாது. எப்படியாகிலும் வருவது வந்தே தீரும். வா போகலாம். (தனக்குள்) நான் நினைத்தவண்ணமே என் கணவனுடைய கடிதத்தை நான் வாசித்துக்கொண் டிருக்கையில் என் சிற்றன்னைக்கு கேட்டே யிருத்தல் வேண்டும். நம்மை ஏதோ தண்டிக்கவே அழைக்கின்றனள் போலும். எல்லாவற்றிற்கும் கடவுளிருக்கின்றார். நம்மாலாகும் காரியம் ஒன்றுமில்லை.

"இன்னவினை யின்னதலத் தின்னபொழுதின்னபடி
யின்னதனை லெய்து மெனவறிந்த—யன்னதனுற்
யன்னதலத் தன்னபொழு தன்னபடி யன்னதமுற்
பின்னமறக் கூட்டும் பிரான்."

என்றபடி வினையானது இன்ன ஊரிலே, இன்ன காலத்திலே, இன்ன விதமாக இன்ன முன்னிலையில் வருமென்றறிந்து அவ்வினையை யவ்வூரில் அக்காலத்து அவ்விதமாக அதன் முன்னிலையில் சிறிதும் மாறுபாடின்றி நடத்துவிக்கிறவன் இறைவனுகும்; அல்லாமலும்,

"சும்மா தனுவருமோ சும்மா பிணிவருமோ
சும்மா வருமோ சுகதுக்கம்—நம்மான்முன்
செய்தவினைக்கீடாச் சிவனருள் செய்விப்பதென்று
லெய்தவினை நாடி யிரு."

என்றிருக்கிறபடியால் சர்வேஸ்வரனுடைய அடியையே சிந்தித்துச் செல்கின்றேன். சிற்றன்னையே! நமஸ்கரிக்கின்றேன் என்னை இவண் அழைத்தக்காரண மென்னை?

ரூபாவதி.—அடி! புவனசுந்தரி! நம்முடைய குலத்திற்கு அவமானத்தை விளைவிக்கவா உன்தாயார் உன்னைப் பெற்றனள். அவளும் உன்னைப்போன்ற துன்மார்க்க நடத்தை யுள்ளவளாயிருத்தல் வேண்டும். "தாயைப் போல் பெண், நூலைப்போல் சீலை" என்ற வசனத்தை உன்னால் உணர்ந்தேன். நல்லது உன்னுடைய சுகத்தைக் கெடுத்தல் பொருட்டு நான் இருக்கையில் நீ எவ்வாறு என்னிடத்திலிருந்து தப்புவாய். நீ அந்த கள்ளப் புருடனுடன் அவன் நகரத்துக்குச் செல்வதை நான் பார்க்கிறேன். அவ்வாடவனுடைய தீரத்தையும் நான் அறிகிறேன். சகி! இப்பாதகியைக் கொண்டுபோய் அந்தப் புரத்திலுள்ள ஓர் சிறையிலடைத்துவிடு.

(சிறையிலடைத்தல்.)

ரூபாவதி.—காவலர்களே! நீங்கள் அதிசீக்கிரமாக ஆழிமத்தியகிரகம் சேர்ந்து நாளையதினம் அஸ்தமித்தவுடன் அங்குவரும் ஆடவனைக் கட்டிப்பிடித்து இங்குக் கொண்டுவரவேண்டும்.

காவலர்கள்.—தாயே! தங்களுடைய உத்திரவின்படியே நாங்கள் செய்வோம்.

(செல்கின்றார்கள்.)

---

## அத்தியாயம் 9.

### பூபாலன் காவலர்களுக்கு தப்பித்துக்கொள்ளுதல்.

பூபாலன்.—(தனக்குள்) நாம் இன்றையதினம் ஆழிமத்திய கிரகம் சென்று புவனசுந்தரியை நமது நாட்டுக்கு அழைத்துச் செல்ல தீர்மானித்தபடி நம்முடைய சினேகிதனும் வியாபாரத்தினின்றும் திரும்பி வந்துவிட்டான். இரவு 10-நாழிகையாய் விட்டது. நண்பனோ நித்திரைச் செய்கின்றான். ஆகையால் புவனசுந்தரியி னிருப்பிடம்

செல்கின்றேன். என்ன! ஆச்சரியமா யிருக்கின்றது! அரண்மனையில் தீபம் ஒன்றும் புலப்படவில்லை. எங்குப் பார்த்தாலும் அந்தகாரத்தால் மூடப்பட்டிருக்கிறது. புவனசுந்தரி சயனித்திருக்கும் அறையிலும் வெளிச்ச மில்லை. ஹா! இதென்னவிந்தை? நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைத்ததே! நம்மை எப்பக்கமும் அசைய வொட்டாமல் வீரர்கள் பிடித்துக்கொண்டார் களே! இனி யென்ன செய்வது? இவர்களிடமிருந்து எவ்வாறு தப்புவது? இங்கு என்ன நடந்திருக்கிறதென்ப தும், புவனசுந்தரி எங்கு சென்றிருப்பதும் ஒன்றும் தெரியவில்லை. இக்காவலர்கள் யாரால் அனுப்பப்பட்டார் களோ? ஆகிலும் இவர்களை நல்ல வார்த்தைகளினால் சங் கதியைத் தெரிந்துக்கொள்ளலாம். (பஹிரங்கமாய்) காவ லர்களே! நீங்கள் என்னை அசையவொட்டாமல் பிடித்துக் கொண்டபடியினாலே நான் உங்களுக்கு அடங்கினவனாகி விட்டேன். இனி உங்களுடைய காவலுக்கு மீறமாட் டேன். ஆனால் என்னை நீங்கள் பிடித்துக்கொண்ட கார ணம் இன்னதென்பதும் உங்களை இங்கு அனுப்பினவர்கள் யாவரென்பதும் எனக்கறிவிக்க வேண்டுகிறேன்.

காவலர்கள்.—ஐயா! இவண் இருந்த புவனசுந்தரியை எங்களரசி தன் அரண்மனைக்கழைப்பித்துச் சிறையிலிட்ட னள். உம்மையும் கட்டிப் பிணித்துவர உத்தரவு செய்த படி. இதோ பிடித்துக்கொண்டோம். இனி உம்மைக் கட்டி எங்களரசியிடம் கொண்டுபோகவேண்டும்.

பூபாலன்.—(தனக்குள்) புவனசுந்தரி அவளுடைய சிற்றன்னையின் கொடூரத் தன்மையை முன்பே நமக்குத் தெரிவித்திருக்கிறாள். நம்மையும் அவள் என்ன கெடுதி செய்ய உத்தேசித்திருக்கின்றாளோ அறியோம். ஆகை யால் இக்காவலர்கள் நம்மைக் கட்டுமுன்னமே நாம் தப்

பித்துச் செல்லவேண்டும். (மெதுவாகத் தன்மடியிலிருந்த வாளை உருவி காவலாளர்களை வெட்டுதல். ஒருவன் மாத்திரம் தப்பியோடுகிறான்) சரி நாம் தப்பினோம் இனி நமது நண்பனுடைய கிரகம் சென்று புவனசுந்தரியினுடைய சிறையை நீக்கும் உபாயம் யோசிப்போம்.

(நிட்கிரமித்தல்.)

காவலாளி—நல்லகாலத்தின் பயனாய் நான் தப்பிப் பிழைத்தேன். என் நண்பர்களெல்லாம் அவ்வீரனுடைய வாளுக்கு இரையானார்கள். இச்சங்கதியை நம்முடைய அரசிக்குத் தெரிவிப்போம். தாயே! நமஸ்கரிக்கின்றேன்.

ரூபாவதி.—நான் பிடித்துவரச் சொன்ன ஆடவனெங்கே? நீ தனியாக வந்த காரணம் யாது? மற்றக்காவலாளிகள் அவ்வாடவனைப் பிணித்துக்கொண்டு வருகின்றார்கள்போலும். நீ முன்னதாக சங்கதிதெரிவிக்க வந்தனையே? என்ன மௌனமாய் நிற்கின்றாய்?

காவலாளி.—அன்னையே! யான் என்ன சொல்லப் போகிறேன். அவ்வாடவனை நாங்கள் பிடித்துக்கொண்டு கட்டுவதற்குள் அவனிடமிருந்த வாளை வீசி எல்லாரையும் எமனுலகம் சேர்த்தான். தெய்வாதீனமாய் நான் தப்பியோடி சங்கதி உமக்குத் தெரிவிக்கவந்தேன்.

ரூபாவதி.—இனி என்ன செய்வது? நம்முடைய எண்ணம் முன்னுக்கு வராமல் போய்விட்டதே. நல்லது இனி என்ன நடக்குமோ பார்ப்போம்.

புவனசுந்தரி—சகி, வனஜாக்ஷி! ஈசனுடைய செயல் எவ்வாறு நடந்துவிட்டது பார்த்தனையா? கடைசியில் என் சிற்றன்னையால் சிறையிலடைக்கப்பட்டேன். நேற்றிய தினம் என்னுடைய காதலர் ஆழிமத்திய கிரகம் போயிருப்பார். அவருக்கு அவ்விடம் என்ன ஆபத்து நடந்ததோ தெரியவில்லை. ஆகையால் அங்கு யாரையாகிலும்

உனக்குத் தெரிந்தவர்களை யனுப்பி சங்கதி தெரிவிக்க வேண்டுகிறேன்.

வனஜாக்ஷி.—புவனசுந்தரி! நீ அஞ்சற்க. என் தங்கை பாநுமதி என்பவளிருக்கின்றாள். அவள் மிகவும் சாமார்த்தியமுள்ளவள். அவளைக்கொண்டு உன் நாயகனுடைய சங்கதியை தெரிந்துவரச் செய்கிறேன்.

(பானுமதியை அனுப்புதல்.)

பாநுமதி.—அம்மா புவனசுந்தரி! என் தமக்கைத் தெரிவித்தபடி நான் ஆழிமத்திய கிரகம் சென்று பார்த்தேன். அங்கு சிலர் வெட்டுண்டு கிடக்கின்றார்கள். அவர்கள் இன்னாரெனத் தோன்றவில்லை. இதைத் தவிர அங்கு சங்கதிதெரிவிக்க யாரும் காணப்படவில்லை.

புவனசுந்தரி—ஆ! ஈசா! இனி என்ன செய்வேன். என்னை ஆதரவற்றவளாகச் செய்தாயே. என் சிற்றன்னை என்னை இங்கு சிறையிட்டவுடனே காவலர்களை யனுப்பி என் காதலர் அங்கு சென்றவுடனே கொலை செய்துவிடும்படி உத்திரவு செய்திருக்கவேண்டும். அவ்வண்ணமே காவலர்கள் அவரைக் கொன்றிருக்கவேண்டும். ஆளனைப் பிரிந்து இனி அவனியிலிருப்பதால் என்னபயன்? எல்லாவற்றிற்கும் உயிர்துறப்பதே தகுதி.

வனஜாக்ஷி.—நீ உன் துயரத்தையகற்று. உன்நாயகர் க்ஷத்திரியகுல அரசனானையால் அல்ப காவலர்களால் கொலை செய்யப்பட்டிரார். அவரோ மிகவும் தீரர். யான் இந்தக்ஷணமே உன் நாயகர் வசித்துவந்த தனஞ்செயனுடைய வீட்டுக்குச்சென்று சகல சங்கதியும் தெரிந்து வருகிறேன். நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். நான் துரிதமாகச்சென்று வருகிறேன்.

(தனஞ்செயனுடைய வீட்டில் நுழைதல்.)

பூபாலன்.—அம்மா வனஜாட்சி! என்ன சமாசாரம்?

நான் துக்கசாகரத்தில் மூழ்கியிருக்கும் காலத்தில் எனக் கோர் பற்றுக்கோலாக நீ இங்கு விஜயஞ்செய்தாய். சூரியனைக்கண்ட பனிபோல் என் துயரம் நீங்கிற்று. என் காதலி சுகமா? அன்னவளுக்கு என்ன சம்பவித்தது? நான் உனக்குத் தெரிவித்திருந்தபடி புவனசுந்தரியை நகரத்திற் கழைத்துச்செல்ல ஆழிமத்திய கிரகம் சென்றேன். அங்கு காவலர்கள் என்னைப் பிடித்துக்கட்ட ஆரம்பித்தவுடனே நான் அஞ்சி என் உடைவாளால் அவர்களை வெட்டித் துணித்துப் தப்பிவந்தேன்.

வனஜாக்ஷி—அரசே! அன்று நீர் என்னிடம் தந்த நிருபத்தைப் புவனசுந்தரி வாசித்துக் கொண்டிருக்கையில் அவள் சிற்றன்னையும் தந்தையும் மறைவாய் கேட்டிருந்துப் பின் நகரம்சென்று புவனசுந்தரியை வரவழைத்து சிறைச் சாலையிலடைத்து உம்மைப் பிணித்துவர ஆட்களை அங்கு அனுப்பினர். உமக்கு அங்கு என்ன சம்பவித்ததோவென வறிய என் தங்கை பாநுமதியை அனுப்பினேன். அவள் சென்று அங்கு சிலர் வெட்டுண்டு கிடப்பதைத் தெரிவித்தனள். புவனசுந்தரி இச்சங்கதியைக் கேட்டதும் நீரும் அங்குமடிந்திருக்க வேண்டுமென்றும், ஆகையால் தானும் உயிர்துறப்பதே உசிதமெனவும் மொழிந்தனள். நான் அனேகவிதமாய் தைரியமுறைத்து உம்மைநேரில் கண்டு வந்து தெரிவிப்பதாக மொழிந்து இங்குவந்தேன். தாங்கள் புவனசுந்தரியை எப்போது உமது நகரத்திற்கழைத்துச் செல்வதும் தெரிவித்தால் நான் அவளுக்குத் தெரிவிக்கிறேன். இனி காலதாமதம் செய்யலாகாது.

பூபாலன்.—சரி! நாளையதினம் ஊர்புறத்திலிருக்கும் காளிகாதேவியின் ஆலயத்துக்கு புவனசுந்தரியை நீ அழைத்துவரின் நான் நகரத்திற்கழைத்துச்செல்கின்றேன்.

வனஜாக்ஷி.—அரசே! அப்படியே எந்த உபாயத்தின

லாகிலும் நான் அவளை அழைத்து வருகின்றேன். நான் சீக்கிரம் செல்கின்றேன்.

(நிட்கிரமித்தல்.)

புவனசுந்தரி.—நான் இன்னும் எவ்வளவு காலம் இக் காவலிலிருக்க வேண்டுமோ தெரிகிலேன். என்பிராண நாதருடைய சங்கதியோ வொன்றும் தெரியவில்லை. என் சகி அவரைக் கண்டனளோ? அவர் அவளைக்கண்டு சம்பா ஷித்தனரோ? யாதும் தெரியவில்லை. அல்லது என் பிராணநாதரைக் காணாது வருந்தி என்னிடம் வரத்துணி யாமல் என் சகி எங்கேயாகிலும் சென்றனளோ? ஆ! தெய்வமே! என்னை இவ்வித துன்பத்தில் ஆழச்செய்வது நீதியோ! இதோ என்சகி வருகின்றனள். சகி! என்நாதர் உயிருடனிருக்கின்றனரா?

சகி.—புவனசுந்தரி! ஏன் வீணே வருந்துகின்றனை? இனி நீ சஞ்சலத்திற் கிடங்கொடாதே. என்பிரிய தோழி! உனது மணாளன் உன்னைப்பிரிந்த சோகத்தால் தவிக்கின்ற னர். ஊண், உரக்கத்தையும் நீத்தனர். யான் அவரை அவரது நண்பருடைய கிரகத்தில் தனியாய்க்கண்டு பேசி னேன். என்னை அவர் கண்டவுடன் அகமகிழ்ந்து ஆனந் தக் கண்ணீருதிர்த்து உன் சங்கதியை வினவினர். உனக்கு நேர்ந்த விபத்தையெல்லாம் நான் ஆதியோடந்தமாய்த் தெரிவித்த பின்னர் நாளையதினம் இவ்வூர் காளிகோயி லண்டை வரும்படிக்கும், உன்னை அவ்விடமிருந்து தன் நகரத்திற் கழைத்துக்கொண்டு போவதாகவும் தெரிவித் தார்.

புவனசுந்தரி.—சகி! இவ்விடம் அருஞ்சிறை யிருக்கும் யான் என்நாதர்பால் செல்வது எவ்வாறு சாத்தியமாகும்?

சகி.—தோழி! இது விஷயத்தில் நீ ஆலோசிக்கவேண் டியதில்லை. நான் வேறு சாவியைக்கொண்டு நீ இருக்கும்

இவ்வறையைத் திறந்துவிடுகிறேன். பின்னர் உன்னை யழைத்துக்கொண்டு கோவில் வரையில் வந்து உன் நாயக ருடன் உன்னைச் சேர்த்து நான் திரும்பிவிடுகிறேன். பின் னல் உன் சிற்றன்னையால் எனக்கு எவ்வித சங்கடம் வந்தா லும் வரட்டும், நான் அனுபவிக்கச் சித்தமாயிருக்கிறேன். நீ பிரயாணத்திற்குச் சன்னித்தையாயிரு.

புவனசுந்தரி.—சகி! நீ கதவைத்திறந்தமையால் வெளி யில்வந்தேன் நடுநிசியானதால் காவலர்கள் தூக்கத்திலிருக் கின்றனர். இதோ உன்பின்னல் வந்து கொண்டிருக்கி றேன். நீ துரிதமாய்ச் செல்வாயாக.

சகி—இதோ காளிகோவில் சேர்ந்து விட்டோம். உன் நாயகரும் கூடிய சீக்கிரத்தில் வந்துவிடுவார்.

புவனசுந்தரி.—சகி! இக்கோயிலை இதுகாறும் யான் கண்டதில்லை. தாழம்பூ முனைபோல் மிக வெண்ணிறமான காட்டானையின் தந்தங்களாலாக்கிய கதவினல் மூடப் பெற்று, இரத்த சாமரங்களின் வரிசைகளையும் பவளத்தை உருக்கிரும்புகளாற்செய்த மாலைபோன்ற கண்ணுடிகளின் பந்திகளையும் பெற்றிருக்கும் இரும்புமயமான தோரண வாயிலுடன் கூடியதுமான இக்கோயிலைப் பார்த்தனையா? சிவந்த சந்தனக்குழம்பில் நனைந்த கரதலங்கொண்டு முத் திரையிடப் பெற்றிருக்கின்றமையால் உதிரத்தினல் சிவந்த கூற்றுவனது கையினல் அடிக்கப்பட்ட சின்னத்துடன் கூடியதுபோல் காண்பதும், சிவந்த நேத்திரங்களையுடைய தாயிருத்தலால் அவற்றை உதிரபிந்துக்களென எண்ணி அதில் அவாக்கொண்ட நரிகளால் நக்கப்பெற்றதுமான இரும்பினலாக்கிய எருமைக்கடாவானது இக்கோயிலுக்கு எதிரில் ஒரு கருங்கல்மயமான மேடையின்மீது அமைக்கப் பெற்றிருக்கின்றது. அதோ பார், ஒருபக்கத்தில் மான்க ளின் கோடிக்கணக்கான கோணக்கொம்புகளின் முனைக

ளால் முளைமுளைத்திருப்பது போலவும், அறுத்தெரியப் பெற்றிருக்கும் ஈரமுள்ள நூற்றுக்கணக்கான நாக்குகளால் செந்தளிர் தளிர்த்திருப்பது போலவும், பல்லாயிரம் சிவந்த கண்களால் பூப்பூத்திருப்பதுபோலவும், அரிந்தெரியப்பெற்ற சவங்களின் மண்டைகளாற் கனிவர்க்கங்களுடன் கூடியது போலவும் பலியிடுவதிற்செய்த கொலைகளின் கோலங்கள் காணப்படுகின்றன. இதோ மரக்கிளைகளின் இடைகளில் செங்கோழிகள் பதுங்கியிருத்தலால் மிகப்பயந்து அகாலத்திற்பூத்த பூங்கொத்துகளுடன் கூடினவைகள்போல காணப்படும் இரத்தாசோக மரங்களால் இக்கோயிலின் ஓர்பாகம் அலங்கரிக்கப் பெற்றிருக்கின்றது. தீபத்தின் தூமம்பட்டு காவிபடிந்து தொங்கிக்கொண்டிருக்கும் திரைச்சீலையுடன் கூடியதும், மயில்களின் தொண்டை முருந்துகளின் வலயங்களால் தொடுக்கப் பெற்றத் தோரணத்தை யுடையதும், மரக்குழம்பினுல் வெண்மையாக்கப்பட்ட மணிகளின் மாலைகளுடன் கூடியதுமான மூலஸ்தானத்தின் வாயிற்படியில் பித்தளையினுற் செய்த சிங்கமுகத்தினுருவங்கொண்ட துளையின் மத்தியில் இரும்பு தாழ்ப்பாளிடப்பெற்றதும், தந்தத்தினுல் செய்த உழல் மரத்தடியை யுடையதும், பொன்னிறம், நீலநிறம், செந்நிறம் என்கின்ற பலவர்னங்கள் பொருந்திய வரிசை வரிசையான கண்ணுடிக்குமிழ்களால் விளங்குபவையுமான இருகதவுகள் அமைக்கப்பெற்றிருத்தலைப் பார்த்தனையா? சகி! நீ செய்த உதவிக்கு யான் என்னகைம்மாறு செய்யப் போகிறேன், அதோ பார்த்தனையா, என்நாதர் அதோ வந்து கொண்டிருக்கிறுர்.

பூபாலன்.—என் கண்மணி! நீ இதுகாறும் துயருற்றதைக்கேட்டு மிகவருந்தினேன். உன் கஷ்டங்களுக்கெல்லாம் நானே காரணமாயிருந்தேனல்லவா?

புவனசுந்தரி.—நாதா! நான் இதுவரையில் பட்டிருந்த கஷ்டங்களெல்லாம் இப்போது உம்மைப் பார்த்தவுடன் சூரியனைக்கண்ட பனிபோல் பரந்தோடின. இனி நாம் இவ்விடம் தாமதிக்கப்படாது. சகி! வனஜாக்ஷி! உன்னை யான் பிரியகாலமாய் விட்டது. ஆனபோதிலும் சீக்கிரத்தில் உன்னை என் கணவருடைய நகரத்திற்கு அழைத்துக் கொள்ளுவேன் என்னைப் பார்ப்பதுபோல் இதோ என் கணையாழியைத் தருகிறேன். அதை நீ அணிந்துக்கொள்வாயாக.

(நிட்கிரமித்தல்.)

ரூபாவதி.—ஹா! என்ன விபரீதம். நான் எவ்வளவோ பத்திரத்துடன் புவனசுந்தரியை காவலில் வைத்து அவளுடைய கர்வத்தை அடக்க எண்ணி அரசனையும் என் வசப்படுத்தியிருந்தும் எவ்விதமாகவோ காவலிலிருந்து தப்பிப்போய் விட்டதாகக் காவலர்கள் தெரிவித்தார்கள். அப்பாதகிக்குத் தோழியாயிருந்த வனஜாக்ஷியினால் தான் அவள் விடுவிக்கப்பட் டிருக்கவேண்டும். நல்லது அத் தோழியை அரசன்முன் நிருத்தி அவளுக்குத் தகுந்த தண்டனையும் செய்விப்பதல்லாமல் புவனசுந்தரி இருக்கும் இடத்தையும் தேடச்செய்து மறுபடியும் அவளைக் கஷ்டத்துக்குள்ளாக்குவதே சரி. (அரசனிடம் சென்று) பிராண நாயகா! தங்களருமைக் குமாரத்தியாகிய புவனசுந்தரியை அவள் தோழியான வனஜாக்ஷி நான் முன்னர் தங்களுக்குத் தெரிவித்திருந்தபடி ஓர் ஆடவனுடன் கூட்டி அனுப்பி விட்டாள். இவ்வாறு ஓர் ராஜகுமாரத்தியை சோரபுருஷனுடன் சேர்த்தனுப்பிய இச்சண்டாளிக்குத் தகுந்த தண்டனை விதிக்கவேண்டும்.

அரசன்.—அப்படியா? அடா சேவகா! வனஜாக்ஷியை சீக்கிரம் இங்கு கொண்டுவா.

சேவகன்.—அரசே! இதோ அழைத்து வந்தேன்.

அரசன்.—வனஜாக்ஷி! அதிக புத்திசாலியென்று நான் இதுவரையிலும் நினைத்திருந்து என் அருமைக் குமாரத்தியினிடம் உன்னைத் தோழியாக அமர்த்தின பலன் இது தானா? இவ்வளவு அக்கிரமமான விஷயத்தில் உன் மனம் எவ்வாறு பிரவேசிக்கத் துணிந்தது? புவனசுந்தரியைச் சோரபுருஷனுடன் அனுப்பினையா? சீக்கிரம் தெரிவி.

வனஜாக்ஷி.—அரசே! புவனசுந்தரி தான் இச்சித்த ஆடவனை விவாகம் செய்துகொள்ளுவதாக சொல்லியிருக்க அவளுடைய சிற்றன்னையான தங்கள் மனைவி தங்களுடைய மேலான மனதை பொய் வார்த்தைகளினால் தன்பால் திருப்பி அவளை அருஞ்சிறை அமைக்க, அரசனின் அருமைத் திருக்குமாரன் பூபாலன் அவ்வாழி மத்திய கிரகம் நண்ணி, தங்கள் குமாரத்தியை காந்தர்வமணம் செய்துகொண்டனன். பூபாலன் தங்கள் குமாரத்தியை அழைத்துச்செல்வதாக எழுதியிருந்த நிருபத்தைக்கேட்ட தங்கள் மனைவி தங்களுடைய புத்தியை மாற்றி, அந்தப்புரத்தில் அருஞ்சிறைப் படுத்தினள். என்னுடைய உதவியால் புவனசுந்தரி காவல்கடந்து தன் நாயகனுடன் நகரஞ் சென்றாள். நான் அவளிடம் வைத்திருந்த பிரீதியினால் அவளுடைய கஷ்டங்களைப்பார்க்க சகிக்காமல் காவலிலிருந்து தப்பும்படிச் செய்தேன். இதற்காகத் தாங்கள் என்ன சிட்சை விதிக்கினும் ஏற்றுக்கொள்ளச் சித்தமாயிருக்கிறேன்.

அரசன்.—எவ்வளவு காரியங்கள் எனக்குத் தெரியாமலே நடந்திருக்கின்றன. எல்லாம் புவனசுந்தரியின் இஷ்டப்படி ஆழிமத்திய கிரகத்திலும், பின் தன் தாய் வீட்டிலும் இருப்பதாக நினைத்திருந்தேனே யொழிய சிறையிலிருப்பதாக உணர்ந்திலேன். ரூபாவதி! உன்னு

லேயே எல்லா விபரீதங்களும் நடந்திருக்கின்றன. நான் உன்னுடைய வஞ்சனை மொழிகளைக்கேட்டு மோசம் போனேன். அடி சண்டாளி! நான் என் குமாரத்தியைப் பார்க்குமளவும் என்முன் நீ வரப்போகாது.

---

## அத்தியாயம் 10

### பூபாலன் புவனசுந்தரியைப் பிரிதல்.

பூபாலன்.—என தாருயிற்காதலி! நீ ஒருவாறு சோர்ந்திருப்பதின் காரணம் யாது?

புவனசுந்தரி.—நாதா! எனக்குப் பிரசவ வேதனையாயிருக்கிறது. ஆகையால் இச்சமுத்திர தீரத்திலிறங்கவேண்டும். இனி பிரயாணம் செய்ய சாத்தியப்படாது.

பூபாலன்.—ரமணி! இதோ இவ்விடத்தில் பிரம்புகளாலும் இலைகளாலும் ஓர் குடிசை அமைத்தேன். அதில் நீ பிரசவிப்பாயாக. பிரம்பினாலேயே ஓர் தொட்டிலும் அமைத்தேன்.

(ஆண்குழந்தை பிரசவமாயிற்று.)

பூபாலன்.—காதலி! இதற்குச் சமீபத்தில் ஓர் நகரம் தென்படுகின்றது. அங்குச்சென்று மருந்து சாமான்கள் வாங்கி வருகின்றேன். நான் வருமளவும் ஜாக்கிரதையாய் இருக்கவும். நான் சென்று வருகிறேன்.

புவனசுந்தரி.—என் நாதர்போய் வெகுநேரமாகியும் இன்னும் திரும்பி வரவில்லை. எனக்கு தாகவிடாய் அதிகமாகின்றது. சமீபத்தில் ஜலம் எங்குகிடைக்குமோ தெரியவில்லை. அதோ சமீபத்தில் ஓர் காறுபோவதுபோல் தோற்றுகிறது, போய் நீரருந்திவருகிறேன்.

(காட்டில் வேட்டையாட வந்திருந்த கீர்த்திசீலனுடைய வேட்டை நாய் குடிசையில் நுழைந்து குழந்தையை தொட்டிலுடன் கௌவிச்சென்றது.)

புவனசுந்தரி.—இந்தக் காற்றின் நீர் எவ்வளவு நன்றாயிருக்கிறது. என் தாகவிடாய் முழுதும் தீர்ந்துவிட்டது. குழந்தையைத் தனியாய் குடிசையில் தொட்டிலில் போட்டு வந்தேன். சீக்கிரம் செல்கின்றேன். ஆ தெய்வமே! குழந்தையைக் காணோமே! இதென்ன கொடுமை! என் நாதரும் இன்னும் வந்திலர்! ஐயோ! நீர் வேட்கையால் நான் வெளியிற் செல்லவும், குழந்தை தொட்டிலுடன் அபகரிக்கப்பட்டதே! ஏ வத்ஸலா ! என் கண்மணி ! என் செல்வமே ! நான் என்னசெய்வேன் ? எவ்விடம் தேடிப்பார்ப்பேன் ? வனதேவதைகள் தூக்கிச்சென்றதோ ? பேய் பிசாசுகள் எடுத்துக்கொண்டு போயினவோ. இந்த நிர்மானுஷியமான இடத்தில் எங்குசென்று பார்ப்பேன். ஐயோ! என் செய்வேன் ? என்னுடல் பதறுகின்றதே. கண்மணி ! குழந்தாய் ! குடிசையைவிட்டு வெகுதூரமளவும் சுற்றிச்சுற்றிப் பார்த்தும் என் மண்மணியைக் காணேனே. ஆ செல்வமே! நீ பிறந்தின்னமொருதினங்கூட ஆகவில்லையே, என் கற்பகமே! என்ன ஆபத்து விளைந்தது. நான் ஜன்மமெடுத்ததுமுதல் கஷ்டமடைகிறேனே யொழிய சுகப்படவில்லையே. என்ன செய்வதும் தோன்றவில்லையே. அக்காட்டில் வெகுதூரம் வந்துவிட்டேனே. குடிசை எத்திக்கிலுள்ளதும் தெரியவில்லை. நகரஞ்சென்ற என் காதலர் திரும்பி குடிசையை நாடி என்னையும், குழந்தையையும் காணாது என் செய்கின்றனரோ. புத்திரன் களத்திர வியோகத்தால் என் நாதர் நிச்சயமாய் உயிர் துறப்பார். சூரியனும் நான்படும் துயரைப்பார்க்க மனமில்லாமல் அஸ்தமித்து விட்டான். குழந்தாய் ! நின் ஜீவ னிதுகாறுமிருக்கின்றதோ இல்லையோ ? ஜெகதீசா ! (மூர்ச்சித்தல்.)

(மச்சதேசத்து அரசன் மனைவி அம்புஜாக்ஷி தன் தோழிகளுடன் காட்டைச் சமீபித்து நந்த வனத்தில் பிரவேசிக்கிருள்.)

அம்புஜாக்ஷி.—தோழிகாள் ! நாம் நெடுநேரம் இந்த நந்தவனத்தில் விளையாடினமையால் எனக்கு தாகம் அதிகரித்திருக்கிறது. ஆகையால் அதோ தெரிகிற தடாகத்தை நாடி வேட்கையைத் தணிக்கலாம். ஆ! இதென்ன வாச்சரியம்? இத்தடாகத்தின் கரையில் ஒருமாது நல்லாள் மூர்ச்சித்துக் கிடக்கின்ருள், அன்னவளுக்கு உயிர் இருக்கின்றதோ ? இல்லையோ ? தெரியவில்லை. இவளுடைய மூர்ச்சையைத் தெளிவித்துப் பின்னர் இவளுடைய சவிஸ்தாரத்தைத் தெரிந்துக்கொள்ளலாம்.

(மூர்ச்சையைத் தெளிவித்தல்.)

புவனசுந்தரி.—அன்னையே ! மகா பாவியான நான் என் நாதரையும், குழந்தையையும் இழந்து இங்கு மூர்ச்சித்த சோபத்தைத்தீர்த்த தாம் யார் ? வனதேவதையா ? அன்றேல் அரி, அயன், அரன் இவர்கள்பாகத் தமர்ந்த பச்சைப்பசுங்கொடிப் பாவையரோ ? தாம் யார் ? அன்னையே !

அம்புஜாக்ஷி.—அம்மணி! நன்கு மொழிந்தீர். உமது சௌந்தரியத்தைப்பார்த்து நான் ஆச்சரியமடைந்து பிரமதேவன் தன் முழு சாமர்த்தியத்தையும் உலகினற்குக் காட்டவெண்ணி உமமை இவ்வளவு அழகுடன் சிருஷ்டி செய்திருக்க வேண்டுமென்று எண்ணி உம்முடைய களையை ஆற்ற நீர் என்னைத் துதிப்பது நீதியாகுமா? தாம் யார்? தமக்கு இவ்வாபத்து சம்பவித்த காரணம் யாது ?

புவனசுந்தரி.—அம்மணி ! யானிருப்பது கலிங்க தேசம். யானும் என் நாதரும் குழந்தையுடன் என் பெற்

ரோர் வசிக்கும் நகரம் செல்லாநிற்க, வழியில் என் நாதர் என்னை ஓரிடத்திலமர்த்தி உணவுப்பொருள் வாங்கிவர சமீபத்திலுள்ள ஓர் பட்டணம் செல்லவும், நான் தாக விடாய் தீர்த்துவரச் சமீபத்திலுள்ள ஓர் காஞற்றுக்குத் தொட்டிலுடன் குழந்தையைவிட்டுச் சென்று மறுபடியும் திரும்பிவந்து பார்க்கையில் குழந்தயைக்காணுது பரத வித்து, காட்டிலலைந்து எங்கும் என் குழந்தையைக் காணுமையால் வருந்தி இங்கு மூர்ச்சையடைந்தேன். என் நாதர் எவ்வாருயினரோ ? குழந்தை என்னவாயிற்றோ ? அறிகிலேன்.

அம்புஜாக்ஷி.—கண்மணி ! இனி நீ துயரப்படாதே, நினக்கு எவ்வளவு துயரிருப்பினும் அதை யகற்று. நின் நாதர் எங்ஙன மிருப்பினும் என்னுடைய சேவகர்களால் தேடச்செய்து அன்னவரை யழைத்துவந்து நின் மனமகிழ நின்னுடன் சேர்ப்பேன். அதுவரையில் என் குமாரத்தி யைப்போல் இவண் வாசஞ்செய்.

கீர்த்திசீலன்.—எனது புத்திரன் பூபாலன் உலகியல் பறியச்சென்றவ னிதுகாறும் வரவில்லையே, யான் என் செய்வேன்? எங்ஙனஞ் சென்றனனோ? எவ்வாருயினனோ? பூபாலன் சென்ற நாள்முதல் நிமிஷமொரு யுகமாகக் கழித்துவருகிறேன். இது என்ன விந்தை! நான் வேட்டை யாட இக்காட்டுக்கு வந்து நெடுநேரமாகியும் என்னுடைய வேட்டை நாய் என்னைவிட்டுப் பிரிந்திருக்கிறது. ஒரு வேளை மிருகங்களைத் தொடர்ந்துசென்று வழி தப்பிப் போயிருக்கவேண்டும். என்ன புதுமை ! அதோ என் வேட்டை நாய் பிரம்பினுல் முடையப்பெற்ற ஏதோ ஒன் றைத் தன் வாயில் கௌவிக்கொண்டு வருகிறது. என்ன ஆச்சரியம் ! அது ஓர் தொட்டிலாகக் காணப்படுகிறது, இதில் ஒரு குழந்தையும் இருக்கின்றதே. ஆ ! இது யாரு

டைய குழந்தையோ? இந்நாய்க்கு இது எங்ஙனம் கிடைத்தது. யாராகிலும் வழிப்போக்கர்கள் தொட்டிலுடன். குழந்தையை எறிந்து போயிருப்பார்களா? குழந்தையோ ஜீவனுடனிருக்கின்றது. இக்குழந்தையின் பெற்றோர்கள் மிருகங்களால் பட்சிக்கப்பட்டனரோ? ஒன்றும் அறிகிலேன். நல்லது இங்கு என்னுடன் வந்திருக்கும் வேடர்களைக்கொண்டு இக்காட்டில் இக்குழந்தையின் பெற்றோர்களைத் தேடச்செய்கிறேன். வேடர்களே! இதோ! இக்குழந்தையைப் பாருங்கள். இது தொட்டிலுடன் என் நாயினால் கொண்டுவரப்பட் டிருக்கின்றது. இதனுடைய பெற்றோர்கள் உயிருடனிருக்கில் இக்காட்டின் சமீபத்தில் தான் இருக்கவேண்டும். ஆகையால் உடனே நீங்கள் சென்று அறிந்துவாருங்கள்.

வேடர்கள்.—அண்ணே! நம்முடைய அரசனுக்குத் தெய்வச் செயலாய் ஓர் குழந்தை அகப்பட்டது. நம்மரசனுடைய நாயோ எவ்வளவு சாமர்த்தியமாய் தொட்டிலுடன் அக்குழந்தையைக் கொண்டுவந்தது பார்த்தாயா? அது யாருடைய குழந்தையோ. அதைப் பெற்றவர்கள் என்னவானார்களோ? நாம் விரைந்து இக்காட்டில் முழுதும் தேடி அவர்களைக் கண்டுபிடிப்போம். என்ன! இக்காட்டில் நாம் நுழைந்து பார்க்காத இடமில்லை. மனித சஞ்சாரத்தை எங்கும் காண்கிலேம். நாம் இன்னும் காலதாமதம் செய்தால் நம் அரசன் கோபிப்பார். ஆகையால் திரும்பிச்செல்வோம். அரசே! இக்காட்டில் நாங்கள் தேடிப்பார்க்காத இடமில்லை, யாரும் எங்கள் கண்களுக்குப் புலப்படவில்லை.

கீர்த்திசீலன்.—நல்லது, இனி நாம் என்ன செய்வது? பூபாலனைப்பிரிந்த சோகம் தணிய நமக்கு கடவுள் இக்குழந்தையைத் தந்தனர்போலும். நாட்டைச்சேர்ந்து

என் காதலியான கமலாவதிக்கு இக்குழந்தையைக் கொண்டுபோய் கொடுக்கிறேன். அவளும் என்னைப்போல் குமாரனுடைய சோகத்திலிருந்தும் நீங்குவாள்.

(அரண்மனையைச் சேர்தல்.)

கீர்த்திசீலன்.—ஏ எனது அன்பு நிறைந்த காதலி! இந்த விந்தையைப் பார்த்தனையா! கடவுளின் மகிமையை என்னென்று சொல்வது. இத்தொட்டிலிருக்கும் ஆண் குழந்தையைப் பார்த்தனையா? நான் வேட்டையாடச் சென்றிருந்த காட்டில் நம்முடைய வேட்டை நாயினால் யாதொரு தீங்குமின்றி இக்குழந்தை சவுக்கியமாய் கொண்டு வரப்பட்டது.

கமலாவதி.—(கரத்தில் குழந்தையை எடுத்துக் கொண்டு) காந்தா! ஆ ஹா! இக்குழந்தையைக் கண்ணுற்றதும் என்மனம் துயரத்திற்குள்ளாகிறது. நாதா! நன்றாய்க் குழந்தையை உற்றுப்பாருங்கள். நமது கண் மணியான பூபாலனைப்போ லிருக்கின்றதே.

கீர்த்திசீலன்.—பிரியே! நீ சொல்வது உண்மையே. பூபாலனைப் போலவேதான் இக்குழந்தை வடிவமிருக்கின்றது. இதைச்சற்று ஆலோசிக்குங்கால் பூபாலன் இவ்வாண் மகவைப்பெற்று தனது மனைவியுடன் நம்நகரத்தை நாடி வருங்கால் ஏதாகிலும் விபத்து நேரிட்டதோ? ஒன்றுந் தோன்றவில்லையே.

கமலாவதி.—பிராணபதி! இக்குழந்தை என் கண் மணியான பூபாலனுடைய தென்பதற்குச் சிறிதும் ஐயமிலது. ஆனால் பூபாலனுக்கு என்ன ஆபத்து நேர்ந்ததோ. உயிருடனிருக்கின்றானோ? இல்லையோ? நான் என்செய்வேன், என்மனம் துடிக்கின்றது, ஆவியும் சோறுகின்றது இனி எக்காலத்தில் என் குமாரனைப் பார்க்கப்போகின்றேன். ஐயோ! தெய்வமே!

கீர்த்திசீலன்.—மாதே! நீ துயரப்படாதே. எல்லாம் கடவுளின் செயலின்படி நடக்கும். நீ துயரப்படுவதிலும், பூபாலனைத் தேடுவதிலும் யாதொரு பயனுமிலது. இக் குழந்தையை எவ்வாறு கடவுள் நம்மிடத்தில் சேர்த் தனரோ அப்படியே நம்முடைய குமாரனையும் நம்மிடம் சேர்ப்பார். அத்தன் அருளை யாரறியக்கூடும்? மேலும் நம்மால் என்ன செய்யக்கூடும்.

"வருந்தி யழைத்தாலும் வாராது வாரா
பொருந்துவன போமினென்றாற் போகா—இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரம் தானினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்."

என்னும் ஆன்றோர் வாக்கியப்படி வருவது வந்தேதீரும். வரும்விதி வழியில் நிற்காது. தெய்வகதியைத்தடுக்க எவ ராலுமாகாது. ஆதலால் விசனத்தை விட்டொழி. நாம் இக்குழந்தையை நன்றாய்ப் பாதுகாத்துவருவோம்.

பூபாலன்.—(தனக்குள்) என் கண்மணியான புவன சுந்தரி இக்காட்டில் எவருடைய துணையுமின்றிப் பிரச வித்தனள். நாட்டிலிருக்கின் எவ்வித பணிவிடைகள் நடக் கும். கடவுளின் அபாரசக்தியை அறிபவரார். எக்காலத் தில், எந்த இடத்தில் என்ன நடக்கவேண்டுமோ அது நடந்தேதீருகின்றன. நான் புவனசுந்தரியைத் தனியாகக் குடிசையில் விட்டு வந்து வெகுநேரமாயிற்று. ஆகார மின்மையால் எப்படி வருந்துகின்றனளோ? சீக்கிரம் செல் கின்றேன். என்ன விபரீதம்! குடிசையில் என் நாயகியைக் காண்கிலேன். எவ்விடத்திற்குக் குழந்தையை எடுத்துச் சென்றிருப்பள்? எனதாருயிர்க் காதலி! கண்மணி! புவன சுந்தரி! எங்குசென்றாய்? நான் வெகுநேரமாகியும் வர வில்லையென்று தேடிச்சென்றனையோ? அப்படியிருக்கின் குழந்தையும் தொட்டிலுடன் காணப்படவில்லையே. நின்

னைக் காணாது தவிக்கின்றேனே. பிராணப்பிரியே! என்ன ஆச்சரியம்! எவ்விடம் சுற்றிச்சுற்றித் தேடினும் இக்காட்டில் காணப்படவில்லையே. அந்தோ! என்ன செய்வேன்? ஒன்றும் தோன்றவில்லையே. நான் உலகவியற்கையை அறிய தெய்வீக அஸ்வத்தைப்பெற்ற பயன் இதுதானோ? நண்பனான சுமதியையும், என் கண்மணியான சுந்தரவல்லியையும் ஆழிக்கிரையளித்தது போதாதென்றோ என்மனதுக்கிசைந்த புவனசுந்தரியையும். குழந்தையையும் பிரியச் செய்தேன். நல்லது அஸ்வத்தின்மேலமர்ந்து அதிசீக்கிரத்தில் இக்காடு, மலை, வனாந்திரம் முதலியவைகளிலெல்லாம் சுற்றிப்பார்த்து என் நாயகியையும், குழந்தையையும் கண்டுத் தெளிவேன். என்ன கொடுமை! வழக்கம்போல் அஸ்வத்தை நினைத்ததற்கு அது என்முன் தோன்ற வில்லையே. சரி! இதற்கென்ன செய்வேன். முனிபுங்கவர் எனக்குத் தெரிவித்திருந்தபடி எனக்கு ஆபத்து வருங்காலத்தில் அது என்னை விட்டகலுமென்றனரே, அது சரியாகமுடிந்து விட்டது. இனி பாதசாரியாய் நடந்து என் காதலியைத் தேடுகின்றேன். முள்ளுங்கல்லும் நிறைந்த இக்காட்டில் நடக்கமுடியவில்லையே! ஈசா! ஐயோ, சரீரம் முட்களால் கீரப்பட்டு உதிரம் பெருகுகின்றதே. சுகமாக முடிசூட்டிக் கொண்டு நகரத்திலிராமல் உலக வியற்கையைக காண வேண்டி பிதாவின் வாக்கை மீறினதற்குச் சஞ்சலப்படுவேனோ? அன்றேல் காதலி சுந்தரவல்லியும், நண்பன் சுமதியும் ஆழியில் முழுகி இறந்ததைப்பற்றிச் சஞ்சலப்படுவேனோ? அன்றி புவனசுந்தரியும் பாலகனும், காட்டில்பிரிந்ததைப்பற்றி நோவேனோ? அன்றேல், முனிவர் அருளிய அஸ்வம் என்னை விட்டு நீங்கினதற்காக அழுவேனோ 'அன்றி என்னை நடக்கவொட்டாமல் முள்ளும் கல்லும் என் உடம்

யில் வைத்து வதைப்பதற்கழுவேனோ? என்செய்வேன்.

(மூர்ச்சையடைதல்.)

இராஜசேகரன்.—யான் எனது தந்தை இறந்தபின் இவ்வைந்து வருடங்களாக இந்த பீமாபுரியை ஆண்டுவந்ததற்கு இதுவரையில் காட்டுமிருகங்களால் நாடுநாசமாக்கப் பட்டதாகக் காணவில்லை. இப்போதோ குடிகளின் குறையை நீக்க இக்காட்டிலுள்ள மிருகங்களை யெல்லாம் வேட்டையாடிச் சிதறவடித்தேன். இனி என் பட்டணம் செல்கின்றேன். ஆ! இது என்ன விந்தை! இக்காட்டில் யாரோ ஒரு குமரன் படுத்திருக்கின்றனன். அவன் சரீரம் முள்ளுகளால் கீரப்பட்டு மிகவும் வாடி இருக்கின்றனன். ஐயோ! யார் பெற்றப் புத்திரனோ? இவனுக்கு என்ன ஆபத்து நேர்ந்ததோ? அப்பா! நீ யார்?

(தட்டி எழுப்புதல்.)

பூபாலன்.—ஐயா!

"ஜனிதாசோபநீதாச
யச்சவித்யாம்பிரயச்சதி
அன்னதாதாபயித்திராதா
பஞ்சைதேபிரதஸ்மீருதஹ."

என்னும் நீதி நூலின்படி எனக்கிருக்கும் ஆபத்தைப் போக்கி எனக்குயிர்ப்பிச்சை யளித்தீர். நீர் என் பிதாவுக்குச் சமானமாவீர். ஆகையால் உமக்கு என் வர்த்தமானத்தைச் சொல்லுகின்றேன். யான் கலிங்கநாட்டிறைவன் மதலை. என் நாமதேயம் புஜபலன். என் பெற்றோர்களென்னைப் பிரிந்தனர். அப்போது பகையரசர்கள் என் இராச்சியத்தை யபகரித்து என் மனைவி மக்களைச் சிறையாகப் பிடித்து என்னையும் வதைக்கமுயல, யான் பகைவர்களுக்குத் தப்பி இவ்வனத்தின் வழியாகவர முள்ளுகளால் என் சரீரம் பலமாகக் கீறப்பட்டமையால் களைத்து

இங்கு சோர்வுற்றேன்.

இராஜசேகரன்.—குழந்தாய்! புஜபலா! யான் புத்திரனில்லாதப் பாவியாயிருக்கின்றேன். யானே பீமாபுரிக்கரசன். நீ என்னரண்மனையிலே என்று மிருப்பின் சகல சொத்துக்களையும் இராச்சியத்தையும் உனக்கே உரிமையாக்குவேன். நின் அபிப்பிராயம் யாது?

பூபாலன்.—(தனக்குள்) இவ்வரசன் சொற்கள் நன்மையாகவே காணப்படுகின்றன. இவரது வார்த்தையின்படி சம்மதித்திருப்பின் கடவுளின் கருணையால் என்மனைவியையும் குழந்தையையும் ஒருக்கால் யான் காணக்கூடும். தெய்வச்செயல் பிறகு என்னமாய் முடியுமோ பார்ப்போம். "அடுத்து முயன்றாலு மாகுநாளன்றி யெடுத்த கருமங்களாகா", ஆகையால் இவருடைய சம்மதியின் படியே இங்கிருந்து என் மனைவியையும், குழந்தையையும் பற்றித் தெரிந்துக் கொள்ளுவேன். அரசே! அனாதையாகிய என்னை யொருபொருட்டாயெண்ணி அருமையுடன் மொழிந்த வார்த்தையைக் கேட்க மகிழ்ந்தேன். உம்முடைய மனதின்படியே நடக்கச் சித்தமாயிருக்கிறேன். தங்களைத்தவிர என்னைக் காப்பாற்றுவார் யாருமிலர்.

இராஜசேகரன்.—அப்பா! இனி உன் சஞ்சலத்தை முற்றும் விலக்குவாயாக. நீ சிலகாலம் நமது நாட்டிலிருந்து பிறகு நமது சேனைகளைக்கொண்டு நின் பகைவரைக்கொன்று உன் நாட்டைக் கைப்பெறலாகும். இனி நமது நாடு செல்வோம். (நிட்கிரமித்தல்.)

சுந்தராங்கி.—வேட்டையாடச்சென்ற என் நாயகன் யாரோ ஒரு சுந்தரமான வாலிபனுடன் வருகின்றார். அப்பிள்ளை யாரோ தெரியவில்லை. நாதா! நமஸ்கரிக்கின்றேன்.

பூபாலன்.—அம்மா! அடியேன் அடி பணிகின்றேன்.

சுந்தராங்கி—நாதா! இவ்வழகிய வாலிபன் யார்?

இராஜசேகரன்.—பிரிய சகி! யான் வேட்டையாடச் சென்ற கானகத்தில் கடவுளருளால் கிடைத்தனன். எனக்குப்பின் உலகையாள இவனை வரித்துவந்தேன். மேலும் இவ்வாலிபன் கலிங்கநாட்டிறைவன் மதலை. இவனுடைய நாட்டைப் பகையரசர்கள் கைப்பற்றி, மனைவிமக்களைச் சிறையாகப் பிடித்துக்கொண்டு இவனையும் கொல்ல எத்தனிக்கையில் தப்பியோடிக் கானகம்புக, யான் பார்த்து அழைத்து வந்தேன். இவன் பெற்றோர்களும் இவனை விட்டுப் பிரிந்தனராம். (பூபாலனைப் பார்த்து) அப்பா! நீ ஆஸ்தானமண்டபம் சென்றிரு. நான் இதோ வருகின்றேன்.

சுந்தராங்கி.—நாதா! ஆதியில் நமது புத்திரியான சந்தரவதனியை விதர்ப்பநாடாளும் கீர்த்திசீலமகாராஜனுடைய மதலையான பூபாலனுக்குக் கொடுத்து விவாகஞ் செய்ய நிச்சயித்திருக்கையில், அவ்விளவரசன் எங்கையோ தேசாந்திரம் சென்றிருப்பதாயும், இதுவரையில் அவன் திரும்பவில்லையென்றும் தெரிகிறது. நமது குமாரத்திக்கோ வயதாய் விட்டது. இனி நாம் அவனுக்காக எதிர்ப்பார்த்திருப்பதில் பயனில்லை. நமக்கு கடவுளுடைய கடாட்சத்தினுல் இச்சுந்தரபுருடன் கிடைத்தனன். நம்முடைய குமாரத்திக்குத் தகுந்த பேரழகையும் அந்தஸ்தையும் பெற்றிருக்கின்றான். தவிர, இவனுக்கு யாரும் திக்கின்மையால் நம்மை விட்டுப்பிரியான். ஆகையால் நமது குமாரத்தியை இவனுக்கே கொடுத்து விவாகம் நடப்பிக்கவேண்டும்.

இராஜசேகரன்—சுந்தரி! நீ சொல்வது உண்மையேயாயினும், நமது குலாசாரவழக்கப்படி நமது கன்னிகைக்குச் சுயம்வரமன்றோ நாட்டவேண்டும்.

சுந்தராங்கி.—நாதா! அப்படிச் சுயவரம் நாட்டினபோதிலும், இப்பேரழகு வாய்ந்த இப்புருடனைத் தவிர

வேறு யாருக்கும் நம் கன்னிகை மாலையிடாளென்று எனக்கு நன்கு புலப்படுகிறது. இவனைவிட சுந்தரபுருடனை இந்த 56-தேசத்திலும் யான் கண்டதில்லை. ஆகையால் தாங்கள் வேறொன்றும் யோசிக்காமல் உடனே சுயம்வரம் நாட்டி தேசமன்னர்களுக்குத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

இராஜசேகரன்.—மாதே! நீ அப்படி நினைக்கொணாது. நாம் சுயம்வரம் நாட்டும் செய்தி தேசமுழுவதும் பரவுமாகையால் பூபாலன் எங்கிருந்தாலும் இதைக்கேள்வியுற்று இங்குவரக்கூடும். ஏனெனில் நம் குமாரத்தியை அவனுக்குக் கொடுப்பதாக நாம் முன் தெரிவித்திருக்கின்றோம். சந்தரவதனியும் அவனையே விவாகம் செய்துக் கொள்ள இஷ்டப்பட்டிருந்தாள். அப்படி அவன் வராவிடில் புஜபலனுக்கே மாலையிடுவாள். அதற்குத் தடையில்லை. இதோ நான் சென்று சகல தேசத்து மன்னர்களுக்கும் சுயம்வர லிகிதம் அனுப்ப மந்திரிப் பிரதானிகளுக்குக் கட்டளைச் செய்கிறேன்.

இராஜசேகரன்.—மந்திரீ! நான் எனது குமாரத்தியான சந்திரவதனியை விதர்ப்பநாட்டரசன் மதலையான பூபாலனுக்கு விவாகம் செய்ய நிச்சயித்திருக்க அவர் தேசாந்திரம் சென்று இதுகாறும் திரும்பி வரவில்லையாம். என் புத்திரிக்கோ தகுந்த வயதாய் விட்டது. ஆனதினால் இனி நாம் தாமதிப்பது யுக்தமாகக் காணப்படவில்லை. எல்லாம் கடவுளின் எத்தனப்படி நடக்கட்டும். ஆகையால், நமது பட்டணத்தை யலங்கரித்து, சகல தேசத்து அரசர்களையும் தம்பதிகள் சகிதம் வரவேண்டுமெனச் சுயம்வர திருமுகமனுப்பி, மார்வார் தேசத்திலிருக்கும் என் சினேகனான கோவிந்ததாசை மேன்மையான பட்டுபீதாம்பரங்களுடன் உடனே வர கடிதமெழுதி, இதோ என் அருகிலிருக்கும் என் பிரியமுள்ள புஜபலனையும் கூட

வைத்துக்கொண்டு விவாக காரியங்களை அதிசீக்கிரத்தில் முடிக்கவேண்டும்.

மந்திரி.—அரசே! தமது கட்டளையின்படியே விவாக காரியங்களை யானும் தமது பிரியமுள்ள புஜபலனுமிருந்து யாதொரு குறைவுமின்றி முடித்து வைக்கின்றோம்.

புஜபலன்.—(பூபாலன்) ஐயா! சந்தரவதனியின் சுயம் வர விஷத்தைப்பற்றித் தாங்கள் விசயனப்படவேண்டிய தில்லை. கடவுள் கிருபையால் ஒருவேளை பூசஞ்சாரஞ் செய்யச்சென்ற பூபாலன் இச்சுயம் வரத்தைக் கேள்விப் பட்டு இங்குவந்து தங்களுடைய குமாரத்திக்கு வரனாக ஏற்பட்டாலும் ஏற்படுவார். தாங்கள் இது விஷத்தில் மனத்துயர் அடையவேண்டாம். நானும், மந்திரியுமாக விருந்து விவாக காரியங்களைக் குறைவர நடத்துகின்றோம்.

கோவிந்ததாஸ்.—அப்பா! சுபுத்தி! இன்றைக்கோ இலாபகரமான ஓர் கடிதம் கிடைத்தது. நெடுநாளாக எனக்கு வியாபாரம் சரிவர நடக்காமையால் மிகவும் திகிலடைந்திருந்தேன். எல்லாம் மொத்தமாகப்பெரும் லாபம் கிடைக்கவாய்த்தது. நீ எனக்கு கணக்கெழுதும் வேலைக்கு வந்தவேளை நல்லவேளை தானென்பதற்குத் தடையில்லை. பீமாபுரிக்கரசனான இராஜசேகரனுடைய குமாரத்தி சந்திர வதனிக்குச் சுயம்வரம் நடக்கப்போகிறதாம். அதற்காக விலையுயர்ந்த பட்டு பீதாம்பரங்கள் தேவையாயிருக்கின்ற தாம். ஆகையால் உடனே அவைகளை எடுத்துக்கொண்டு போகவேண்டும். எனக்குச் சரீரசுகமில்லாமலிருக்கிறபடி யால் நீயே எனக்காக அவ்விடம் சென்று சாதுரியமாகப் பேரம்பேசி ஒன்றுக்கு நாலுவிலை அதிகப்படுத்தி மிகுந்த இலாபத்திற்கு விற்றுக்கொண்டு வரவேண்டும்.

சுபுத்தி.—(சுமதி) எஜமானே! நான் அப்படியே தங்களாக்கினையின்படிச் சென்று தாங்கள் கட்டளையிட்டத்

தொகைகளுக்கு விற்று இலாபத்துடன் வருகிறேன்.

இராஜசேகரன்.—மந்திரி! விவாகத்தைப் பற்றிய சகல காரியங்களும் பூர்த்தியாய்விட்டதா? அரசர்கள் எவரேனும் வந்திருக்கின்றார்களா?

மந்திரி.—அரசே! நான் தங்களிடம் விடைபெற்றுச் சென்றதுமுதல் அதே வேலையாகவிருந்து பூர்த்திசெய்துப் பட்டணத்தை யலங்கரித்துச் சித்தப்படுத்தினேன். 56-தேசத்து மன்னர்களும், தம்பதிகளுடன் வந்து சேர்ந்தார்கள். அவரவர்களுக்குத் தகுந்த விடுதிகளமைத்துள்ளேன். தங்கள் பிரியனான புஜபலன் அவர்களுக்கு வேண்டிய போஜன விஷயத்தில் சரிவர நடத்திக்கொண்டு வருகிறார்.

(சுபுத்தி பிரவேசித்தல்.)

சுபுத்தி.—மகராஜ்! நமஸ்கரிக்கின்றேன்.

இராஜசேகரன்.—அப்பா! நீ யார்? இங்கு என்ன காரியமாக வந்தனை?

சுபுத்தி.—அரசே! நான் மார்வார்தேசத்து கோவிந்ததாஸ் அனுப்ப வந்தேன். தங்களுடைய நிருபத்தின்படி விலை யுயர்ந்த பட்டு பீதாம்பரங்கள் முதலியவற்றைக் கொண்டு வந்திருக்கின்றேன். அவைகளின் கிரயத்தைத் தங்களிடம் பெற்றுக்கொண்டு தங்களுத்தரவின்படி நடந்துக்கொள்ள எனக்குக் கட்டளையிட்டவண்ணம் யான் வந்தேன். என்பெயர் சுபுத்தி.

இராஜசேகரன்.—அப்பா! சுபுத்தி! பட்டுபீதாம்பரங்கள் கொண்டுவந்ததற்காக நான் மிகவும் சந்தோஷமடைந்தேன். அரண்மனையிலிருக்கும் புஜபலனிடம் அவைகளைக் கொடுத்துவிட்டு நீயும் இந்த விவாக காரியங்களைச் சற்று கவனிக்க விரும்புகிறேன்.

சுபுத்தி.—அரசே! தங்களுடைய உத்தரவின்படியே நடந்துக்கொள்ளுகிறேன். (புஜபலனிடம் செல்லல்.) ஆ!

என்ன விந்தையாயிருக்கிறது! இவரைப் பார்த்தால் எனது நண்பரான பூபாலனைப்போல் காணப்படுகிறது. ஆனால் இவர் பெயர் புஜபலனென்று சொல்லுகிறார்களே. எதற்கும் நான் பதறலாகாது. அவர்தானோ? அல்லது வேறு யாரோ? ஒருக்கால் என்னுடைய கண்களே என்னை மயக்குகின்றனவோ? அவராயிருந்தால் என்னை உணராரா? (பிரகாசமாய்) ஐயா! அரசன் இந்தப் பட்டுப்பீதாம்பரங்களைத் தங்களிடம் கொடுக்கக் கட்டளையிட்டனர்.

புஜபலன்.—(தனக்குள்) என்ன ஆச்சரியம்! இவன் நமது நண்பனான சுமதியைப்போல் காணப்படுகிறான். எதற்கும் நாம் அவசரப்படலாகாது. அவனாயிருந்தால் என்னை இப்போது கண்டுகொள்ளமாட்டானோ? (பிரகாசமாய்) அப்பா! நீயார்? எங்கிருப்பது?

சுபுத்தி.—ஐயா! யானிருப்பது மார்வார் தேசம். கோவிந்ததாசின் உத்தரவின்படி இந்தப் பீதாம்பரங்களைக் கொண்டுவந்தேன்.

புஜபலன்.—நல்லது, இவ்விடத்தில் வைத்துச் செல்வீராக

(சகல அரசர்களும், தம்பதிகளுடன் அரசமாளிகையில் ஒருவருக்கொருவர் கண்டு க்ஷேமசமாசாரங்களை விசாரித்துக்கொள்ளுதல்.)

அம்புஜாட்சி.—அம்மா கமலாவதி! தங்களைப்பார்த்து நான் நெடுநாளாயிற்று. இதோ தங்கள் மடியிலிருக்கும் குழந்தை யாருடையது? இக்குழந்தையைப் பார்த்தால் என் குமாரத்தியைப்போல் ஜாடை தெரிகிறது. குழந்தைகளென்றால் எனக்கு மிகவும் பிரீதி. என் கையில் கொடுங்கள், நான் சற்று வைத்திருந்து தருகிறேன். (குழந்தையை வாங்கிக்கொண்டு முத்தமிடல்) அம்மா! ஆநந்தவல்லி! தாங்களும் இன்றுதான் வந்ததாகத் தெரிகிறது.

தங்களைப் பார்த்து இரண்டு வருடங்களாகின்றன. தங்களுடனிருக்கும் இப்பெண் யார்?

ஆனந்தவல்லி.—அம்மா! அம்புஜாட்சி! இவள் என் பெண்தான்.

புவனசுந்தரி.—என்னை ஆதரித்துவரும் அம்புஜாட்சியின் மடிமீதிருக்கும் குழந்தை என் வயிற்றிலுதித்துக் காணுமற்போன குழந்தையைப்போல் காணப்படுகிறது. என் குழந்தை இருக்கின் இவ்வளவு வயதுள்ளதாகத்தானிருக்கும். என் ஜாடையாக விருக்கிறதென்று ஆநந்தவல்லியும் சொல்கின்ருள். இக்குழந்தையைப் பார்க்கப் பார்க்க எனக்கு ஏதோ ஒருவிதமாக விருக்கிறது. சற்று அதை நான் வாங்கி என் கரத்திலேந்திக் கொள்வேன். (கையில் குழந்தையை வாங்கிக்கொண்டு) செல்வமே! நீ யார் பெற்றக் குழந்தையோ? காணுமற்போன என் குழந்தை நீதானே? உன்னைப் பார்க்கப் பார்க்க எனக்குத் துயரமதிகரிக்கின்றதே. கண்மணி! இது என்ன புதுமையாயிருக்கின்றதே. இவ்விடம் வந்த விருந்தினரை வரவேற்று உபசரிக்கும் இம்மகான் யார்? இவரைப் பார்த்தால் என் பர்த்தாவைப்போல் காணப்படுகிறுர். என்னுடைய சந்தேகத்தை யாருடன் சொல்வது? ஒருக்கால் என் நாயகராக இராவிடில் இவ்விடத்திலுள்ளவர்கள் என்னை ஏளனம் செய்யமாட்டார்களா? ஆனால் நடை உடை பாவனைகளை முற்றும் பார்க்கில் என் நாதர்தானென்று எனக்கு நன்ருகத் தோன்றுகின்றது.

சுந்தரவல்லி.—ஆ! இதென்ன இவ்விடத்தில் அங்குமிங்கும் நடந்து விருந்தினரை உபசரிக்கும் இப்புண்ணிய புருஷனைப் பார்த்தால் எனது நாதரைப்போல் காண்கிறதே. அதோ இருக்கும் மாதைப் பார்த்தால், எனது நாயகனை ஈன்ற அன்னையைப்போ லிருக்கின்றதே. இச்

சந்தேகத்தை எவ்வாறு தெரிந்துகொள்வது? அவசரப் படாமல் சற்று நிதானிப்போம்.

(கமலாவதி, சுந்தரவல்லி, புவனசுந்தரி இம்மூவருமாகத் தனித்தனியாய் சந்தேகம் நிவர்த்தி செய்தல் பொருட்டு பூபாலன் சற்று மறைவாய்ப் போகும் தருணம் பார்த்து அவன்பின் செல்லுதல்.)

கமலாவதி.—(பூபாலன் எதிரில் சென்று) அப்பா! குமாரா! பூபாலா! என்னைப் பூர்த்தியாய் மறந்தனையோ? இங்கு எப்படி வந்தாய்?

புவனசுந்தரி.—எனது ஆசைக் கண்ணாளா! என் மீதுள்ள அன்பை மறந்தீரோ?

சுந்தரவல்லி.—(தனக்குள்) இவரென்ன இன்னொரு மாதை விவாகம் செய்துக்கொண்டதாகக் காணப்படுகிறது, இருக்கட்டும். (பிரகாசமாய்) நாதா! நான் சமுத்திரத்தில் விழுந்து இறந்துவிட்டதாக நினைத்திருக்கின்றீரோ?

பூபாலன்.—அன்னையே! நமஸ்கரிக்கின்றேன். என் கண்மணிகாள்! வருத்தப்படாதீர்கள். இன்னும் சற்று நேரம் இரகசியத்தை வெளியிடாதீர்கள். பிறகு என்னுடைய சவிஸ்தாரங்களைத் தெரிவிக்கின்றேன்.

கமலாவதி.—ஆ ஹா! இவ்விரு மாதர்களும் என் குமாரனுடைய மனைவிகளா!

---

# அத்தியாயம் 11.

## சுயம்வர மண்டபம்.

இராஜசேகரன்.—இச் சபா மண்டபத்தில் நிறைந்துள்ள சகல அரசர்களே! சீமாட்டிகளே! என் செல்வக் குமாரியான சுந்தரவல்லியை இதோ இருக்கும் விதர்ப்ப நாட்டரசராகிய கீர்த்திசீல மகாராஜனுடைய அருந்தவப் புத்திரசிகாமணியான பூபாலன் ன்பவருக்கு விவாகம் செய்யக் கருதியிருந்தேன். எனெனில்

"பரிஜனம்பகைவர்கள்வர் படர்தருமுயிர்கள்தான்என்று
உரைசெய்ஐந்திடத்தினும் உலகினையிடையூரெய்தா
வரிசையில்காத்துநீதி வழுக்கினர்தம்மைமொத்தி
கரிசறப்பொருளுங்கோடல் காவலர்தருமமாமே."

என்றபடி, எல்லாவிதத்திலும் அரசகாரியத்தில் சற்றும் வழுவாதவர். அன்னவர் உலகியல் பறிய பூசஞ்சாரம் செய்துவரச் சென்றவர் இந்நாள்வரையிலும் தமது நாட்டையடையாமையால் இச்சுயம் வரத்தை ஏற்பாடு செய்தேன்.

பூபாலன்.—பீமாபுரியையாளும் அரசே! தாங்கள் தெரிவித்த அவ்வரசகுமாரன் தன் மனைவியான சுந்தரவல்லியுடனும், தனது நண்பன் சுமதியுடனும் முனிவரால் கிடைத்த அஸ்வத்தின்மீது ஆரோகணித்து ஆகாய மார்க்கமாய்ச் செல்லும்போது அஸ்வத்தின் அதிர்ச்சியால் தன் மனைவி சமுத்திரத்தில்விழ, அவளைத் தாவிப் பிடிக்கச் சென்ற தனது நண்பனும் ஆழியில் விழுந்தனன். பின்னர் பூபாலன் அவ்விருவருடைய வியோகத்தால் விசனித்து அஸ்வத்தின்மேல் மூர்ச்சையடைய அவ்வஸ்வம் மாவிந்தபுரம் அணுக, அவ்விடத்தில் ஒரு தனவானுடைய குமாரனை தனஞ்செயன் என்பவரால் ஆதரிக்கப்பட்டு,

பிறகு ஆங்கு சமுத்திரமத்திய கிருகத்திலிருந்த அந் நாட்டரசன் குமாரத்தியான புவனசுந்தரியின் நேசத்தைப் பெற்று, அன்னவளுடன் வெகு பிரயாசையுடன் விதர்ப்ப நாட்டை நோக்கி வருகையில் ஆரணியத்தில் புவனசுந்தரி ஓர் ஆண் மகவை யீன்றனள். உணவு சாமான்கள் முதலியன வாங்கிவர அவ்வாரண்ணியத்தின் சமீபமுள்ள ஓர் பட்டணத்திற்கு பூபாலன் சென்று மறுபடியும் திரும்பி வந்து பார்க்கையில் தனது நாயகியான புவனசுந்தரியையும், பாலகனையும் காணாது பரிதபித்து காட்டிலலைந்து முட்களால் சரீரமுழுதும் கீறப்பட்டவனுகையால் சோர்ந்து விழுந்துவிட்டான். பிறகு அங்கு வேட்டையாட வந்திருந்த தாம் அவனை அழைத்து வந்தீர். அன்னவன் யானே. யானே அப்பூபாலன்.

கீர்த்திசீலன்.—தனையா! உன்னை இதுகாறும் யான் பிரிந்திருந்த வருத்தத்தைத்தீர்க்க பகவான் இன்று கருணை பொழிந்தனரல்லவா?

சுந்தரவல்லி—நாதா! நான் ஆழியில் விழுந்து ஒரு பலகையின் சகாயத்தால் கரையிலொதுக்கப்பட்டு இதோ இருக்கும் ஆதித்தபுரியின் அரசனுடைய மனைவியான ஆநந்தவல்லியினுல் ஆதரிக்கப்பட்டு இங்கு உம்மை இன்றுக் கண்டு ஆநந்தமடைந்தேன்.

சுமதி.—நண்பா! ஆழியில் யான் உமது மனைவியைக் காப்பாற்ற முயன்றதில் பயன்படாது யான் உயிர்விடும் தருவாயில் மார்வார் தேசத்து வியாபாரி கோவிந்ததாஸ் என்பவரால் காப்பாற்றப்பட்டு அவருடைய உத்தரவினுல் இங்கு வந்தேன். உம்மை இங்குக்கண்டு ஆநந்தமடைந்தேன்.

புவனசுந்தரி.—நாதா காட்டில் என்னையும் குழந்தையையும் விட்டுத் தாம் சமீப பட்டணம் சென்று வெகு

நாழிகை வரையில் திருப்பி வராததால் எனக்கு தாகம் அதிகரித்து சமீபத்திலிருந்த நீரோடைக்குச சென்று நீரருந்தி திரும்பி வந்துப் பார்க்கையில் தொட்டிலுடன் குழந்தையைக் காணாது காட்டி லலேந்து மூர்ச்சையடைய இதோ இருக்கும் அம்புஜாட்சியினால் ஆதரிக்கப்பட்டு இங்குவந்து உம்மைக் கண்டேன்.

கீர்த்திசீலன்.—தனயா! நான் காட்டில் வேட்டை யாடச்சென்றிருக்கையில் ஓர் வேட்டைநாயினால் தொட்டி லுடன் கொண்டுவரப்பட்டக் குழந்தை இதோ இருக்கின் றது. இதுதான் உம்முடைய குழந்தை.

ஜெயசீலன்.—இராஜதனயா! உனது நேச மனைவி புவனசுந்தரியைப் பெற்றவன் யானே. உன்னை மருமகனா கச்செய்த கடவுளுடைய கருணைக்குச் சந்தோஷமடைந் தேன்.

ரூபாவதி —இராஜகுமாரா! உன் விஷயத்திலும், என் சக்களத்தியின் குமாரத்தியாகிய இந்த புவனசுந்தரி விஷ யத்திலும் நான் செய்த அபராதங்களை மன்னிக்க வேண்டு கிறேன்.

இராஜசேகரன் —ஆ ஹா! என்ன ஆச்சரியம்.

> "ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட் டொன்றாகும்,
> அன்றி அதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
> நினையாது முன்வந்து நிற்பினும் நிற்கும்
> எனையாளு மீசன் செயல்."

என்றபடி நான் நினைத்தபடியாகவே கடவுள் அனுக்கிரகம் செய்ததைப்பற்றி மகிழ்ந்தேன். நான் நினைத்திருந்தவண் ணமே இப்பூபாலன் எனக்கு மருகனாக ஏற்பட காலம் வாய்த்தது. சபையோர்களே! தாங்கள் அனைவரும் சேர்ந்து என்குமாரத்தி சுந்தரவதனிருக்கும், பூபாலனுக்கும் விவாகத்தை நடப்பிக்க வேண்டிக்கொள்ளுகிறேன்.

பதினாயிரம் கால்களமைத்த மண்டபம் நிருமிக்கப் பட்டது. ஒருபக்கம் ஸ்ரீ சாம்பவமூர்த்தியின் திருவிளை யாடல்களை விளக்கும் சித்திரப் பதுமைகளாலும், ஒரு பக் கம் ஸ்ரீ வைகுண்டநாதனுடைய தசாவதாரப் பதுமைக ளாலும், ஒருபக்கம் உமையவளுடைய திருவுருவப் பதுமை யும், ஒருபக்கம் ஸ்ரீ லட்சுமியின் திருவுருவப் பதுமையும் கலைமகளின் திருவுருவப்பதுமையின் அமைக்கப்பட்டன. நானாவித விநோத விசித்திரங்களாலும், வர்னக் கொடிசீலைக ளாலும் அம்மண்டபம் ஒழுங்கிடப்பட்டது. பிராமணர்க ளும், அரசர்களும் ஆசீர்வதிக்க பூபாலனுக்கும், சுந்தர வதனிக்கும் விவாகம் நடந்தேறியது. சுபம்!

முற்றுப்பெற்றது.

---

PRINTED AT SRI "BHARATHI" PRESS, CHOOLAI MADRAS.

ஸ்ரீராம பராக்கிரமம். இதில் ஸ்ரீராமபிரானுடைய அனந்த கல்யாண குணங்களை விளக்கி யிருப்பதன்றி அவருடைய முழு சரித்திரத்தையும் அதி சுலபமாக பாலர், பாலிகைகள் முதல் சகலரும் தெரிந்துக்கொள்ளும் வண்ணம் நல்ல செந்தமிழ் நடையில் பல மேற்கோள்களுடன் எழுதப்பட்டிருக்கிறது. விலை அணு 6.

நவரத்தின ஒப்பாரி. இது நம் தமிழ்நாட்டு சகோதரிகளுக்கு மிகவும் அவசியமாகிய ஓர் சிறந்த நூல். இதில் தோகையர் துயரமும், மன்மதனுக்கும் ரதிக்கும் நடக்கும் வாக்குவாதமும், காமனெரிந்தா னெரியவில்லையென்ற சந்தேகநிவர்த்தி லாவணியும் அடங்கியிருக்கின்றது. இதன் விலை அணு 5.

இல்லற மாலிகா. இதில் சகலரும் அநுஷ்டித்து வரும் பண்டிகை, நோன்பு, விரதம் முதலியவைகளின் சவிஸ்தாரத்தை விளக்கி யிருப்பதால் ஒவ்வொரு குடும்பத்திலும் அவசியம் இருக்க வேண்டிய ஓர் சிறந்த பொதுநூல். இதன் விலை அணு 4.

ஸ்ரீ கேதாரீஸ்வர விரதமகிமை. இவ்விரதத்தின் மகிமை இன்னதென்பதையும், அதையனுட்டிக்கும் முறையையும் சகலரும் எளிதிலுணர்ந்து அதன்படி யனுட்டித்து சகல ஐஸ்வரியங்களையும் பெற்று இம்மை மறுமைப்பயன்களை யடைவார்களென மிகவும் தெளிவான பாட்டு உரையுடன் எழுதி வெளியாக்கப்பட்டிருக்கிறது. நம் தமிழ்நாட்டு சகோதரிகள் ஒவ்வொருவரிடத்திலும் இப்புத்தகம் அவசியம் இருத்தல் வேண்டும். விலை அணு 2.

டெய்லரிங் அண்டு கட்டிங். இது தையல்வேலை செய்பவர்களுக்கு மிகவும் உபயோகமுள்ளது. இதில் சொக்காய், கோட் முதலியவைகளை வெட்டுவதற்குத் தேவையான கணக்குகளுடன் ஆங்காங்கு படங்களமைத்துப் பிரித்துக் காட்டியிருப்பதால் யாவரும் தாமாகவே மேற்கண்ட வேலைகளை அதிசுலபமாகவும் திருப்திகரமாகவும் செய்வதற்குப் பெருந்துணையா யிருக்கும்.

இதன் விலை ரூபா 1 0 0

---

எமது விலாசம்:—எஸ். துரைசாமி முதலியார்

19, ஆலத்தூர் சுப்பிரமணிய ஆச்சாரி தெருவு

சூளை போஸ்டு, மதராஸ்.

## விவேகாநந்தபோதம்.

இது வைதிக வேதியர் என்னும் மறுநாமங் கொண்ட ஓர் அற்புத இன்பரசக்கதை. இதில் குருநாத சுவாமிகளின் யாத்திரையில் நேரிடும் சம்பவங்களெல்லாம் படிக்கப் பரமாநந்தத்தை விளைவிக்கும். அணா 10.

## தனபதி.

அறிவைப்புகட்டி நன்னெறியில் யாவரையும் தூண்டச்செய்யும் இன்றியமையாத ஓர் சிறந்த நாவல். சந்தர்ப்பானுசாரமான மேற்கோள்களுடன்வியப்பைத் தரும் பல அரிய விஷயங்களடங்கியிருக்கின்றது. விலைஅணா 8.

## சிவசாமி (2-பாகமும்.)

இவ்விரு புத்தகங்களிலும், சிவசாமி என்பவனுடையநாட்டு வாழ்க்கையையும், நகர வாழ்க்கையையம்பற்றி மிகவும் விநோதமாய் எழுதப்பட்டிருக்கிறது. விலை அணா 8.

## பங்கயச்செல்வி அல்லது பதிவிரதாசிரோமணி.

இது நூதன முறையில் மிகவும் சாதுர்யமாய்ப் புனைந்தெழுதப்பட்ட சிறந்ததோர் கற்பனை நாவல். விலை அணா 12.

## மதனமனோகரி.

இஃது ஓர் இனிய செந்தமிழ் நாவல். இக்கதாநாயகியின்சரித்திரத்தால் படிப்போரின் மனக்கவலையும் கஷ்டமும் பறறரத் தொலையும். விலை அணா 6.

## விவேகாநந்தன்.

இக்கதாநாயகன் ஆரண்யவாசியாகி திருடர்களிடம் சிக்கிப் பிறகு கப்பலிலேறி கடலில் விழுந்து தவித்துக் கடைசியில் தன் தாய் தந்தையரிடம் சேர்வது மிகவும் சோகரசமுள்ளது. இதின் விலை அணா 6.

## சுந்தராம்பாள்.

இது ஓர் சோகரசமான நூதன நாவல். இதில் குறித்திருக்கும் சம்பவங்கள் கல் நெஞ்சையும் கரையச்செய்யும் ஆற்றலுடையது. அதிக விந்தையும், வியப்பையும் தரக்கூடிய நாவல்களில் இது முதன்மையானது. இதன் விலை அணா 6.

## பொன்மலைப் புதுமை.

இது ஓர் துப்பறியும் நாவல். இதில் அந்தரங்க கள்ளநோட்டுச்சாலையின் காட்சியும், இரகசிய அறைகளின் அமைப்பும், காவற்சாலைகளின் சூட்சிகளும், துப்பறியும் உத்தியோகஸ்தர்களின் திறமைகளும் ஆச்சரியத்தை விளைவிக்கும். அணா 12.

## தயாபரசுந்தரி.

இதுவிநோதத்திலும்விநோதமான ஓர் புதியநாவல். இக்கதாநாயகிகேட்கும் மூன்றுஆச்சரியமான கேள்விகளும், சித்திராங்கதன் என்பவனுடைய சமர்த்தான விடைகளும் மிகவும் விந்தையா யிருப்பதுடன் நவரசங்களும் இக்கதையில் அடங்கியிருக்கின்றது. விலை அணா 12.

# நவீன கதா புத்தகங்கள்.

## சுகுணசுந்தரி.

இது ஓர் நவீனநாவல். தெள்ளிய செந்தமிழ் நடையில் விசேஷ அலங்கார சொற்களால் புனைந்தெழுதப்பட்டிருக்கிறது. கதையோ மிகவும் அருமையானது. படிப்போரின் மனதை எவ்வகையிலும் பரவசப் படுத்தக்கூடியது. விலை அணு 8.

## ஆநந்தரங்கன்.

இது மிகவும் வியப்பைத்தரும் ஓர் சிறந்த துப்பறியும் நாவல். இதில் முதலிலிருந்து கடைசிவரையிலுள்ள ஆச்சர்ய சம்பவங்கள் யாவரையும் திடுக்கிடச்செய்யும். விலை அணு 10.

## மோகனவல்லி.

இது ஓர் அற்புதக்கதை. உலகத்தில் சுகதுக்கங்கள் ஊழ்வினைப் பயனின்படி நடக்குமென்னும் திருஷ்டாந்தத்தை இதில் விவரித்திருக்கின்றது. அணு 5.

## வாயாடிவம்பன்.

ஓயாத சிறிப்பைத் தரும் ஓர் இனிய நவீன விகடக்கதை. விலை அணு 4.

## சற்பகவல்லி

இது ஓர் அற்புதக்கதை. இக்கதா நாயகி எமலோகத்திற்குச் சென்று இறந்துபோன தனது கணவனுடைய உயிரை மீட்டுக் கொண்டு வருவது மிகவும் ஆச்சரியமாக விருக்கும். அணு 8.

## தடிராமன்.

இது ஓர் வேடிக்கையும் விநோதமுமான அகடவிகட ஆனந்தக்கதை. விலை அணு 5.

## இல்லறமாலிகா:

இதில் சகலரும் அநுஷ்டித்து வரும் பண்டிகை, நோன்பு, விரதம் முதலியவைகளின் சவிஸ்தாரத்தை விளக்கி யிருப்பதால் ஒவ்வொரு குடும்பத்திலும் அவசியம் இருக்கவேண்டிய ஓர் சிறந்த பொதுநூல். விலை அணு 4.

## ஸ்ரீராம பராக்கிரமம்.

இது ஓர் சிறந்த பக்தி நூல். பாலர், பாலிகைகள் முதல் சகலரும் எளிதில் வாசிக்கத்தகுந்த செந்தமிழ் நடையில் இராமாயணம் முழுசரித்திரமும் விளக்கியிருக்கின்றது. விலை அணு 6.

## இந்துதேகாப்பியாசசாதனம்

இது தேகதத்துவ அவயவங்களின் அத்தியாவசியத்தை தெரிவித்து சரீரத்தை பலமாகவும், சௌக்கியமாகவும் போஷிப்பதற்கான அப்பியாச முறைகளை படங்களுடன் விவரித்திருக்கின்றது. விலை அணு 8.

## டேய்லரிங் அண்டு கட்டிங்.

கோட்டு முதலிய உடுப்புகளை வெட்டுவதற்கான பிளான்களும் [illegible] இதில் காட்டியிருக்கின்றது. விலை ரூபா 1.

---

எமது விலாசம்:—எஸ். துரைசாமி முதலியார்.
19, ஆலத்தூர் சுப்பிரமணிய ஆச்சாரி தெரு,
ஜார்ஜ்டவுன்? [illegible], மதராஸ்.